# பாரதமணி

ஆசிரியர் :
கா. சி. வேங்கடரமணி

காரியாலயம் :
295, லிங்க செட்டி தெரு, மதராஸ்

வருஷ சந்தா { உள்நாடு ரூ. 4
வெளிநாடு ரூ. 6

| மாலை 4 | ஞாயிறு 8-9-40 விக்ரமஹு ஆவணிமீ 24உ | முத்து 15 |
|---|---|---|

## பொருள் அடக்கம்



# உலக வர்த்தமானம்

ஐரோப்பிய யுத்தம் தொடங்கி ஒரு வருஷம் ஆகிறது. இந்த ஒரு வருஷ யுத்தத்தின் முடிவில் பிரிட்டனின் யுத்த பலமும் எதிரியைத் தாக்கும் தைரியமும் வெகுவாக விருத்தி யடைந்திருக்கின்றன என்பது நன்கு விளங்குகிறது. சென்ற ஆகஸ்டு 15-ம் தேதிமுதல் விமான யுத்தம் மிகவும் மும்முரமாக நடந்து வருகிறது. ஒவ்வொருநாளும் ஏராளமான ஜெர்மன் விமானங்கள் லண்டனைத் தாக்குகின்றன. ஆனால் பிரிட்டிஷ் விமானப்படை அவற்றைச் சுட்டு வீழ்த்துவதில் ஒன்றும் குறைவில்லை. இவ்வளவு படை யெடுப்புக்கும் லண்டன் ஒன்றும் பீதியடைந்ததாகத் தென்படவில்லை. சென்ற மாதம் 30வரையில் விமானப்படைகள் வெற்றிகரமாகப் பெர்லினைத் தாக்கின. தொழிற்சாலைகளுக்கும், இன்னும் சில முக்கிய ஸ்தாபனங்களுக்கும் மிகுந்த சேதங்கள் ஏற்பட்டிருக்கின்றனவென்று தெரிகிறது.

பிரிட்டன் உன்னத நோக்கத்துடன் சென்ற ஒருவருஷகாலமாகக் கடும்போர் புரிந்து வருவது உலகத்தில் எல்லாத் தேசத்தையும் திருப்தியளித்திருக்கிறது என்பது அந்தந்த தேசங்கள் பிரிட்டனுக்குத் தயங்காமல் உதவி அளிக்க முன் வருவதிலிருந்து நன்கு விளங்கும். ஆஸ்திரேலியா ஓர் பெரும் விமானப் படையைப் பிரிட்டனுக்குத் திரட்டி அனுப்ப ஏற்பாடு செய்திருக்கிறது. கானடாவும் யுனைடெட் ஸ்டேட்ஸும் யுத்தத்தில் இறங்காவிட்டாலும் சர்வாதிகாரிகளை ஒழிக்கவேண்டிய ஏற்பாடுகளைக் காலதாமதமின்றிச் செய்து வருகின்றன. சென்ற வாரத்தில் வெளியான ஆங்கிலோ யுனைடெட்ஸ்டேட்ஸ் ஒப்பந்தத்தின் ஷரத்துகள் பிரிட்டனின் யுத்த பலத்தைப் பன்மடங்கு அதிகரித்திருக்கின்றன. அவ்வொப்பந்தப்படிக்கு அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் வடக்கு, தெற்கு பிரதேசத்தில் பிரிட்டிஷாருக்குச் சொந்தமான கப்பல் விமான தளங்களை அமெரிக்கா 99 வருஷ காலத்துக்குக் குத்தகைக்கு வாங்கி இருக்கிறது. குத்தகைக்கு வாடகையோ அல்லது வேறு செலவோ ஒன்றும் அமெரிக்கா கொடுக்கவேண்டியதில்லை. ஆனால் பிரிட்டன் அமெரிக்காவுக்குச் சொந்தமான 50 பழைய நாசகாரிகளைப் பெறுகிறது.

இவ்வொப்பந்தம் பற்றி வாஷிங்டன், லண்டன் வட்டாரங்கள் மிகவும் திருப்தி யடைந்திருக்கின்றன என்று தெரிகிறது. பிரஸிடெண்ட் ரூஸ்வெல்டின் போக்கைக் கொஞ்ச நாட்களுக்குமுன் கண்டித்த விண்டல்வில்க்கி கூட இவ்வொப்பந்தத்தின்மீது ஒன்றும் குறைகூறவில்லை என்று தெரிகிறது.

"அமெரிக்காவின் சமரஸத்தைக் காக்கவே தான் இவ்வொப்பந்தத்திற் கிணங்கினேன். இதனால் நாம் யுத்தத்தை வலிய இழுக்கிறோம் என்று தப்பபிப்ராயங் கொள்ளவேண்டாம்" என்று பிரெஸிடெண்ட் ரூஸ்வெல்ட் அமெரிக்க காங்கிரஸின்முன் இவ்வொப்பந்தம் கையெழுத்தானதைத் தெரிவித்தபோது கூறினார்.

இவ்வொப்பந்தம் நேசதேசத்தினர் பலத்தை மிகவும் பெருக்கக்கூடியது என்று தெரிந்திருந்தபோதிலும் அச்சுக்காரர்கள் இதைப்பற்றி ஒன்றும் அபிப்ராயம் கூறியதாகத் தெரியவில்லை.

பால்கன் தகராறுகள் ஒரு வழியாக ஒழிந்தன. ருமேனியா தென் டோப்ருட்ஜாவைப் பல்கேரியாவுக்குக் கொடுத்துவிட்டது. டிரான்ஸில்வேனியாவின் முக்கால்

வாசி பாகத்தை அச்சுக்காரர்களின் வியன்னா தீர்மானத்தின் நிர்ப்பந்தத்தால், ஹங்கேரிக்கு விட்டுவிட ருமேனியா ஒப்புக்கொண்டு விட்டது. ஆனால் ருமேனியாவின் சில பாகங்களில் அச்சுக்காரர்களின் தீர்மானத்தை எதிர்த்துக் கிளர்ச்சிகள் உண்டா யிருக்கின்றன என்று தெரிகிறது. கிளர்ச்சியை அடக்கித் தங்கள் தீர்மானப்படி ருமேனியா—ஹங்கேரி எல்லையை நிர்ணயிக்க அச்சுக்காரர்கள் மிக்க பந்தோபஸ்து செய்து வருகிறார்கள் என்று செய்தி கூறுகிறது.

பிரிட்டிஷ் பத்திரிகைகள் அச்சுத் தீர்மானத்தைக் கண்டித்து எழுதுகின்றன. அச்சுக்காரர்கள் ருமேனியாவின் சமரஸத்தைக் காப்பதாக அபயப்ரதானம் செய்து அதைத் துண்டுபோட்டுப் பல்கேரியாவுக்கும் ஹங்கேரிக்கும் தானம் செய்வது சுயநலத்தை உத்தேசித்துத்தான் என்று பத்திரிகைகள் அபிப்ராயப் படுகின்றன.

டில்லியில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம், வைஸ்ராயின் அறிக்கையிலும், அமெரி அறிக்கையிலும் சமரஸத்தை உண்டுபண்ணும் அம்சங்கள் இல்லை என்பதைத் தெளிவு படுத்திற்று. வைஸ்ராயின் நிர்வாகச்சபையைப் பெருக்கி அதில் இந்தியத் தலைவர்களுக்கு இடங் கொடுத்தால் மாத்திரம் போதாது; உடனே தேசீய சர்க்காரை அமைக்க வேண்டும், என்று பிரிட்டனுக்கு எடுத்துக் கூறியது.

காங்கிரஸ் மெஜாரிட்டியுள்ள எல்லா மாகாணங்களிலும் சட்ட சபை அங்கத்தினர்கள் கூடி டில்லி காங்கிரஸ் தீர்மானத்தை ஆதரித்துத் தீர்மானங்கள் நிறைவேற்ற வேண்டும் என்று அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி காரியதரிசி உத்தரவிட்டார்.

“முஸ்லிம் லீக் பிரிட்டிஷார் சுயராஜ்யம் கொடுப்பதற்குத் தடையாக இருப்பதாகத் தெரிகிறது. அப்படியானால் லீகர்களே ஒரு பிரதம மந்திரி தேர்ந்தெடுத்து அவர் தலைமையின் கீழ்த் தேசீய சர்க்கார் அமைக்க இடங் கொடுக்கட்டும்” என்று ராஜாஜி பிரிட்டிஷாருக்கு ஒரு உபாயங் கூறினார்.

பம்பாயில் கூடிய முஸ்லிம் லீக் காரியக் கமிட்டி ராஜாஜியின் புதிய தாராளமான யோசனையைப் பற்றி ஒன்றும் கூறியதாகத் தெரியவில்லை. லீகர்களுக்குள்ளேயே இதுபற்றி அபிப்ராய பேதம் இருந்து வருவதாகத் தெரிகிறது.

இதைப்பற்றி ஒன்றும் தீர்மானிக்காவிட்டாலும் வைஸ்ராயின் அறிக்கை பற்றியும் அமெரி அறிக்கை பற்றியும் லீக் தன் அபிப்ராயத்தைக் கூறிவிட்டது. வைஸ்ராயின் அறிக்கை லீக் கோரிக்கைக்குச் சற்றே இணங்கியதாக இருந்த போதிலும் சில அம்சங்களில் அவ்வறிக்கைகள் லீக்குக்குத் திருப்தியளிக்கும்படி இல்லையாம். வைஸ்ராய் தம் நிர்வாக சபைக்குத் தேர்ந்தெடுக்க ஒரு கோஷ்டியினரைத் தேர்ந்தெடுக்கும்படி லீகர்களைக் கேட்டுக் கொண்டது ஜின்னாவுக்குப் பிடிக்கவில்லை. “அங்கத்தினர்களை நாங்களே தேர்ந்தெடுக்கிறோம்” என்று கூறுகிறார். வைஸ்ராய் முஸ்லீம் லீக் பிரதிநிதிகளைத் தம் நிர்வாக சபைக்கு அழைக்கும்போது லீக் எந்தக் கட்சியுடன் நிர்வாக சபையில் வேலை செய்யவேண்டும் என்பதைப்பற்றித் தெளிவு படுத்தவில்லையாம். எனவே இந்தச் சந்தேகங்களைத் தீர்க்கும்படி லீக் வைஸ்ராயைக் கேட்டுக்கொண்டது.

காமன்ஸில் இந்தியா மந்திரி இனி இந்திய விவகாரம் பற்றித் தாம் புதிதாகச் சொல்லப்போவது ஒன்றுமில்லை என்று கூறிவிட்டார்.

அடுத்த வாரத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பம்பாயில் கூடப்போவதாகத் தெரிகிறது. காந்திஜியும் கூட்டத்தில் கலந்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறார் என்று செய்தி கூறுகின்றது.

ராஜாஜி தம் தென்னாட்டுச் சுற்றுப் பிரயாணத்தில் ஜனங்களுக்குக் காங்கிரஸ் கோரிக்கையையும், பிரிட்டிஷார் அதற்குக் கொடுத்த பதிலையும் எடுத்துரைத்தார். “இந்தியா இனிமேல் பொறுத்திருக்காது; சுதந்திரம் அடைந்தே தீரும்” என்று கூறினார். பொதுமக்கள், இந்தியாவின் சுதந்திரத்தைப் பெற மிகுந்த தியாகங்களையும் செய்யத் தயாராக இருக்க வேண்டும் என்று எச்சரித்தார்.

# என்ன சொல்லுகின்றனர்?

## "இவ்வளவு தானா ஹிட்லர் கைவரிசை!" அமெரிக்கா சிரிக்கிறது

"ஹிட்லர் கைவரிசை இவ்வளவுதானா?" என்று அமெரிக்கா கேட்பதாக "டெய்லி டெலிக்ராப்" பத்திரிகையின் நியூயார்க் நிருபர் கூறுகிறார்:—

ஆகஸ்ட் 26-ந் தேதியன்று லண்டனில் நெடுநேரமாக நடந்த விமானத் தாக்குதலின் நோக்கம் எவ்வளவு தொந்தரவு கொடுக்க முடியுமோ அவ்வளவும் கொடுக்க வேண்டும் என்பதைத் தவிர வேறொன்றுமில்லையென்று இங்கிலாந்திலுள்ள அமெரிக்க நிபுணர்கள் எல்லாரும் நினைக்கிறார்கள். இரவிலே ஜனங்களின் தூக்கத்தைக் கெடுப்பது தானா ஹிட்லர் செய்யக்கூடியது என்று அமெரிக்கர்கள் கேட்க ஆரம்பித்திருக்கிறார்கள். இங்கிலாந்தின்மீது உண்மையான தாக்குதல் ஆரம்பித்து விடப் போகிறது என்று ஐந்தாவது தடவையாகவோ ஆறாவது தடவையாகவோ பெர்லினில் அறிவித்திருக்கிறார்கள். பூச்சாண்டி காட்டுவதிலே நாஸிகள் கைதேர்ந்தவர்கள் என்பது இதனால் இன்னும் கொஞ்சம் நன்றாய் விளங்குகிறது. கொஞ்ச காலத்துக்கொருமுறை இப்படிப் பயங் காட்டுவது கேலிக் கூத்தாகத் தான் போய்விட்டது. குண்டெறிவதிலே நாஸியர் எவ்வளவு கோழைகள் என்பதையும் அமெரிக்கர்கள் உணர்ந்துகொண்டார்கள். "ஏதோ குருட்டாந்தசையாய்ப் பட்டால் தவிர ஜெர்மன் குண்டுகள் சரியாய்த் தாக்குவதில்லை என்று தான் சாதாரண மக்கள் நினைக்கவேண்டியிருக்கிறது" என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## படையெடுப்புத் திட்டம் என்ன ஆயிற்று?

"மாஞ்செஸ்டர் கார்டிய"னின் ராணுவ நிருபர் பின் வருமாறு எழுதுகிறார்:—

இந்த நாட்டைச் சண்டப் பிரசண்டமாய்த் தாக்கவேண்டு மென்னும் திட்டத்தை ஜெர்மன் யுத்த தேவதை தற்சமயம் விட்டு விட்டதா என்ன? ஜலசந்திகளைக் கடந்து படை முதலியவைகளைக் கொண்டு போக முடியும் என்ற நம்பிக்கை ஜெர்மானியருக்கு இன்னும் இருக்குமானால், டோவர் ஜலசந்தியின் பக்கமாய் வைக்கப்பட்டிருந்த பீரங்கிகளை முக்கிய மற்றொரு கப்பல் கூட்டத்தின்மீதும் டோவரை அரை மனத்தோடு தாக்குவதற்கும் உபயோகித்திருக்க மாட்டார்களே!

விமானப் போர் நிலையில் ஏற்பட்டுள்ள மாறுதலிலிருந்தும் இதே முடிவுதான் கிடைக்கிறது. பெருத்த அளவிலே கடற்கரைப் பிரதேசங்களிலே நடந்து பிரிட்டிஷ் விமானப் படையினரிடம் சரியான தோல்வியுற்ற தாக்குதல்கள் படையெடுப்புக்கு முன் ஆரம்ப வேலையாகத்தான் நடந்திருக்க வேண்டும்.

சென்ற வாரத்திலே இங்கு மங்குமாக நடந்த தாக்குதல்கள், கரைப் பிரதேசத்திலே பெருவாரியான தாக்குதல்கள் மாறுதலடைந்ததனால் ஜெர்மனியில் அதிக கவனம் செலுத்தப்படுவதைத் தடுப்பதற்காகவும் மேற்கொண்டு போடப்பட்ட திட்டங்களுக்கு ஏற்பாடுகள் பூர்த்தியாகும் வரை ஏதோ ஒன்று நடக்கவேண்டுமே என்பதற்காகவுந்தான் நடந்தன. இந்தப் புதுத் திட்டங்கள் என்ன உருவில் வெளிப்படும் என்று இவ்வளவு சீக்கிரமாய் ஒன்றும் சொல்ல முடியாது. ஒரே ஒரு விஷயந்தான் நிச்சயமாய்த் தெரிந்திருக்கிறது. ஜெர்மானியர்கள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்ப தென்பது முடியாது.

போர் நிலையைப் பொறுத்துப் பார்த்தோமானால், படையெடுப்பை விட்டுவிட்டது நமக்கு முற்றிலும் அனுகூல மென்று சொல்ல முடியாது. பெருத்த அளவிலே ஒரு படையெடுப்பு நடந்து அதைச் சரியாக முறியடித்திருந்தோமானால் வெற்றியானது பெரிதும் கிட்டி வந்திருக்கும்.

# உதிர்ந்த மணிகள்

இந்த யுத்தத்திற்குப் பிறகு ஒவ்வொரு தேசத்திலும் அபேத விவாதக் கொள்கை பரவத்தான் செய்யும். இந்த யுத்தத்தில் பிரிட்டிஷார் ஜெயித்தாலும், இனி அவர்கள் முன்போல் தனித்த சாம்ராஜ்யமாக இருக்க முடியாது. கே. ஸந்தானம்

* * *

உலகே ஒரு நிரந்தரமான குரு க்ஷேத்திரம் (யுத்த களம்) அங்கு ஒரு நிமிஷமாவது பயங்கரமான யுத்தம் இல்லாமல் இருப்பதில்லை. இந்த இயற்கை யுத்த களத்தில் குணங்கள்தான் எதிருக்கெதிர் நின்றுகொண்டு யுத்தம் செய்கின்றன.

சுவாமி சுத்தானந்த பாரதி

* * *

சென்ற இருபது வருஷங்களாகக் காங்கிரஸின் பெருமை மேற்கு தேசங்களில் விருத்தியாய்க்கொண்டே வருகிறது. நாம் நிராயுதபாணிகளாய் இருந்த போதிலும் சுயராஜ்யத்தை அடைவோம் என்று நம்புகிறோம். அதை அடையும் நிலைமைக்கும் வந்துவிட்டோம், என்பதை உலகம் முழுவதும் ஆச்சரியத்துடன் கவனித்துக் கொண்டே வருகிறது. காந்திஜி

* * *

அடிமைத்தனம், தரித்திரம், துக்கம் இவற்றை நீக்குவதற்காக மகாத்மா ஒரு வைத்தியர் இருக்கிறார். அவர் சொல்கிறபடி பத்தியங் காக்கவேண்டும்.

ராஜகோபாலாச்சாரியார்

முஸ்லிம் லீக் எந்த விஷயங்களைத் தெளிவுபடுத்தும்படி வைஸ்ராயைக் கேட்டதோ அந்த விஷயங்களையும், ராஜாஜியின் பெருந்தன்மையான யோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டால் ஏற்படும் நிலைமையையும் ஒத்திட்டுப் பார்க்கும்படி இந்திய முஸ்லிம்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

"ஸ்டேட்ஸ்மன்"

* * *

சுத்த ஆரியனோ, சுத்த திராவிடனோ இப்பொழுது இல்லவே இல்லை. ஆர்யாவர்த்தமும் இல்லை. திராவிட நாடும் இல்லை. பகுக்கமுடியாத ஹிந்துக்களுக்குச் சொந்தமான ஹிந்துஸ்தான் ஒன்றுதான் இருக்கிறது.

டாக்டர் வரதராஜுலு நாயுடு

* * *

இந்த யுத்தத்தின் பலாபலன்களைச் சிந்திக்குங்கால் நாம், எங்கெங்கு முடியுமோ அங்கங்கெல்லாம் பதவியிலிருப்பது தான் புத்திசாலித்தனம்.

ஸத்தியமூர்த்தி

* * *

காங்கிரஸ், ஹிந்துக்கள், முஸ்லீம்கள், பஸ்ஸிகள், சீக்கியர்கள் யாவரும் சேர்ந்து கட்டின ஸ்தாபனமாகும். அது ஒரு வகுப்பு ஸ்தாபனம் என அதை ஒதுக்குவது விவேகமல்ல.

பஷீர் அஹமத் சையத்

---

(399-ம் பக்கத் தொடர்ச்சி)

தெரிந்துவிட்டது. ருமேனியா பெட்ரோல் தர தாமதித்தாலும், அன்றி ரஷ்யா தலையிட்டாலும் இப்போது ஜெர்மனி ஹங்கேரி மூலமாக ருமேனியாவில் நுழைய எளிதாகி விட்டது.

இன்று ஹங்கேரி பெற்றுள்ள பிரதேசத்திற்கு ருமேனியரே பெரும் பான்மையினர். மாகியார் பத்து லட்சம்; ருமேனியர் பதினைந்து லட்சம். எனினும் இத்தகைய அநியாய ஆக்ஞையை ருமேனிய சர்க்கார் ஏற்றுக் கொண்டு விட்டனர். சஞ்சலப் புத்திக்குப் பயன் இது தான். எஞ்சியுள்ள ருமேனியா 1912-ம் ஆண்டு நிலை அடைந்து விட்டது. அரசரின் சஞ்சல புத்தியால் இன்று தவிக்கும் ருமேனியா வல்லரசின் உதவி பெறவும், மேலும் தன் பிரதேச பாதுகாப்பிற்காகவும் ருஷ்ய நட்பு பெறுவதற்காகவும் பொது உடைமைக் குடியரசாவதற்கு முயலலாம்.

# ருமேனியாவின் நிர்க்கதி

[த. கிருஷ்ணமூர்த்தி, மயிலாப்பூர்]

காலில் விழுந்தவனைக் காட்டிக் கொடுத்துவிட்டது ஜெர்மனி. அதன் நெருக்கம் பலமாயிருந்ததால் அதனை எதிர்க்க உதவி வேண்டி 1938 நவம்பரில் அரசர் கரோல் லண்டன் சென்றபோது சேம்பர்லின் கைவிரித்தார். ஆறு திங்கள் கழித்துத் தாமே வலிய மறுத்த உறுதியை ருமேனியாவிற்களித்தார். அந் நம்பிக்கையின் மேல் முதன் மந்திரிகளையும் அமைச்சர்களையும் சுட்டு வீழ்த்தி மக்களைத் திகிலடையச்செய்த இரும்புக் காவலாகளின் தலைவர் கார்டியானுவைச் சுட்டு வீழ்த்தினர் ருமேனிய சர்க்கார். சர்வாதிகார நாடாவது ஜனநாயக நிழலில் சற்று தாமதித்தது. சென்ற செப்டம்பரில், போலந்தின்மீது கிழக்கேயிருந்து சோவியத் ருஷ்ய படையெடுக்க தாங்கள் கொடுத்த உறுதி ருஷ்யப் படையெடுப்புக்குச் செல்லாதெனப் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய சர்க்கார் கூறத் தம் நாட்டின் மீது ருஷ்யா பாயுமானால் பிரிட்டிஷ் உதவி கிடைக்குமா வென்ற ஐயம் மன்னர் கரோலுக்குத் தோன்றிவிட்டது. ஜெர்மனி வெற்றிமேல் வெற்றிபெறவும், ருஷ்யா பால்டிக் நாடுகளிடையும் பின்லாந்தினிடையும் தனக்கு வேண்டியவைகளைப் பெறவும் அது தம் நாடு மீதே இறுதியாகப்பாயுமென ருமேனியா எண்ணியது. எனவே ஜெர்மன் நட்பு பெற்றால் அவ்விரு நாடுகளிடையுமிருந்த நெருங்கிய சம்பந்தத்தால் தாம் தப்பலாமெனக் கரோல் எண்ணி ஜனநாயக அரசியலமைப்பை நிறுத்திச் சர்வாதிகார முறையில் சகல அதிகாரங்களையும் தாமேகொண்டார். எனினும் ரஷ்யா சும்மாவிராமல் பெசரேபியாவையும், வடக்கு புகோவினாவையும் தந்துவிட வேண்டுமென ருமேனியாவைக் கேட்டது. உடனே ஜெர்மனியின் ஆதரவு பெறப் பிரிட்டன் தனக்குக் கொடுத்த உறுதியினின்றும் விலகிக்கொண்டது. எனினும் ஜெர்மன் உதவி பெறவில்லை. ஆகவே சிறிய நாடு ருமேனியா சோவியத் சர்க்காருக்குப் பணிந்துவிட்டது.

சோவியத் நாட்டிற்குப் பணியவும் பல்கேரியா தென் டாப்ருஜாவையும்,ஹங்கேரி டிரான்சில் வேனியாவையும் தங்களுக்களித்து விட வேண்டுமென வற்புறுத்தின. பல்கேரியா கேட்டதில் பெரும் பாகம் தருவதாக ருமேனியா கூறியும் அந்நாடு ஏற்கவில்லை. அதே சமயத்தில் சோவியத்தின் உதவியும் அது பெறலாமெனத் தெரிந்தது. பிரிட்டிஷ் சர்க்காரும் தங்களுக்கிருந்த கோபத்தால் பல்கேரிய கோரிக்கை நியாயமானதெனக் கூறினர். வேறு வழியின்றிச் சிறிய பிரதேசமாகிய தென் டாப்ருஜாவை ருமேனியா கொடுத்துவிட்டது. அதன் தொந்தரவில்லாதிருந்தால் ஹங்கேரியின் அதீதமான கோரிக்கையைப் புறக்கணிக்க முடியுமென ருமேனியா எண்ணியது.

சர்வாதிகார நாடுகளுடன் சேர்ந்தால் அந்நாடுகளுக்குக் கட்டுப்பட்ட ஹங்கேரியின் தொந்தரவிலிருந்துதப்பலாமென ருமேனியா தன்னை ரோம—பர்லின் அச்சில் ஆழ்த்திக்கொண்டது. மேலும் சோவியத் தொந்தரவு இல்லாதிருக்கத் தனக்கு எளிதில் உதவக்கூடிய வல்லரசு ஜெர்மனியைத் தவிர எதுவுமில்லை எனக் கண்டது. ருமேனிய பெட்ரோல் ஜெர்மன் போருக்கு அவசியமாதலால் தன் நாட்டில் எவரேனும் வம்பு செய்தால் தன் அபிமானத்தைப் பெற ஜெர்மனி உதவுமென ருமேனியா எண்ணியது. ஆனால் வேலியே பயிரை மேய்ந்துவிட்டது.

சென்ற மகாயுத்த முடிவில் நேச தேசத்தினருடன் சேர்ந்து சண்டையிட்ட ருமேனியாவிற்கு ஜெர்மனியுடன் சேர்ந்து போர் புரிந்து தோற்ற ஹங்கேரி 39,774 சதுரமைல் பரப்புள்ள பிரதேசத்தை விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று. வெர் சேல்ஸ் சமாதானத்தால் ஹங்கேரி போல் இழந்தது எந்நாடுமில்லை. போருக்கு முன்னிருந்த அளவுக்கு மூன்றிலொரு பாகமாகவே பின்னர் எழுந்தது. டிரான்சில்வேனியா ஹங்கேரியால் ருமேனியாவிற்கு விடப்பட்ட பிரதேசம். 24,020 சதுர மைல் பரப்புள்ளது. பாக்கி ஹங்கேரியால் விடப்பட்ட பிரதேசத்தை இப்போது ரஷ்யா கொண்டுவிட்டது. ருமேனியாவிலுள்ள 13,86,777 மாகியார் மக்களில் 13,53,675 குடிகள் டிரான்சில்வேனிய வாசிகள். அவர்கள் தொகையைவிட இதர தொகை மூன்று பங்கு அதிகம். டிரான்சில் வேனியாவின் மத்தியிலுள்ள சிகுலியன் பிரதேசத்திலேயே மாகியார் மக்கள் பெருந்திரளாக வசிக்கிறார்கள். ஆனால் அதைச்

சுற்றிலும் அதற்கும் ஹங்கேரிக்கு மிடையி லுள்ள பிரதேசத்திலும் ருமேனியர்களே பெரிதும் வசிப்பதால் சிகுலியன் டிரான்சில் வேனியாவில் ஒரு ஹங்கேரிய தீவுபோ லிருக்கிறது. ஆகவேதான் ஹங்கேரி டிரான்சில்வேனியாவைத் தரவேண்டுமெனக் கேட்டபோது ருமேனியா தங்கள் தங்கள் இனத்தவரை மாற்றிக் கொள்ளலாமென்றும், அதிகப்படியாக ருமேனியாவினின்றும் ஹங் கேரி செல்லும் மாகியாருக்கு உரிய பிர தேசத்தை ஹங்கேரி எல்லைப்புறமுள்ள டிரான்சில் வேனியா ஜில்லாக்களினின்றும் சிலவற்றைத் தருவதாகவும் ருமேனியா கூறி யது. இதற்கு ஹங்கேரி ஒருப்படவில்லை. முதலாவதாக அது ருமேனியா சர்க்கார் 1930-ம் ஆண்டு ஜனக் கணிதத்தொகையை ஏற்கவில்லை. அச்சர்க்கார் மாகியார் இனத்த வரையே மாகியார் தொகையில் சேர்த்திருக் கிறார்கள். ஜெர்மன் விருப்பப்படி யூதர்களை வெருட்டும் ஹங்கேரி மாகியார் மொழி வழங் கும் அச்சாதியினரையும் 1910-ம் ஆண்டு பதி வில் ஹங்கேரியர் எனப் பதிவு செய்திருக் கிறது. அதன் ஆட்சியிலிருந்தபோது பிற இனத்தவரை ஹங்கேரிய மொழியையே கையாளவேண்டுமென வற்புறுத்தி வந்ததால் பலர் தம் தாய்மொழி விட்டு ஹங்கேரிய மொழியைக் கைக்கொண்டனர். ஆகவே இவ்விரு இனத்தவரையும் விட்டதே ருமேனியர் கணக்கு. அது நியாயமானது என் பதை எவராலும் மறுக்கமுடியாது. அப்படி யிருந்தும் ஹங்கேரி கூறுவதுபோன்று ஏற்று லும் 15,56,000 மக்களே மாகியார் ஆவர். ஆகவே அதன்படியும் டிரான்சில் வேனியா வில் ருமேனியரே பெரும்பான்மையினர். ஹங்கேரியில் வசிக்கும் ருமேனியரைவிட ருமேனியாவில் வசிக்கும் மாகியார் இருபது பங்கு அதிகமாயிருப்பினும் மக்கள் மாற்றத் தால் அதற்குரிய வீதாசாரப்படி ருமேனியா ஹங்கேரிக்கு இடங்கொடுத்தாலும் டிரான்சில் வேனியாவின் மேற்கு எல்லைப்புற ஜில்லாக் களை மாத்திரமே விடவேண்டிவரும். சிகுலி யன் பிரதேசம்கூட மாகியார் மாற்றப்பட் டால் ஹங்கேரிக்குச் சேராது. ஆகவேதான் ஹங்கேரி ருமேனியாவின் நியாயமான கோரிக்கைக்குச் சிறிதுமிணங்கவில்லை.

ஹங்கேரியிலுள்ள பலர் சர்வாதிகார நாடு களை இவ்வளவுகாலம் ஆதரித்து வந்ததற்கு அவை டிரான்சில்வேனியாவை அது பெறு தற்கு உதவவேண்டுமெனக் கருதினர். இத் தாலி முழுமையும் ஹங்கேரியை ஆதரித்தது. டிரான்சில் வேனியாவிற்குப் பதிலாக ஸ்லோ வேகியாவை விழுங்கலாமென சமிக்ஞை ஜெர் மனியினின்றும் வெளிவந்ததை ஹங்கேரி பொருட்படுத்தவில்லை. ரஷ்ய, பல்கேரிய ஆக்கிரமிப்பால் ருமேனியா பலவீனமடைந் திருக்கும் இச் சமயமே ஏற்ற தருணமென ஹங்கேரி முடிவு கட்டிவிட்டது'' ஸ்லோவே கியா வெகு சிறு நாடு. ஆகவே என்றும் எளி தில் விழுங்கலாம். அதற்கு அவசரமில்லை. டிரான்சில் வேனியாவே இன்று வேண்டும்'' என்று தீர்மானித்தது.

டிரான்சில் வேனியாவின் எப்பிரதேசம் விட்டாலும் தாம் எதிர்ப்பதாக மானியு கூறினர். அவர் பெருந்தலைவர். கரோல் மன்னர் திரும்பவும் அரியாசனம் பெற்றது அவராலேயே. மன்னரின் எதேச்சாதிகாரக் காரியங்களைக்கண்டு பதவி துறந்தவர் ஜன நாயக மானியு. அவர் எதிர்ப்பால் கரோல் ஹங்கேரி கோரிக்கைக்கு உடனே இணங்க வில்லை. எனவே ஜெர்மனியைப் பிணக்கு தீர்க் கும்படி வேண்டினர். ஹங்கேரி கோதுமையும் ருமேனியா பெட்ரோலும் ஜெர்மன் போருக்கு இன்றியமையாத வஸ்துக்கள். ஆகவே ருமேனியாவிடமிருந்து எளிதாகப் பெட்ரோல் பெற ஹங்கேரியைச் சற்று பணி யும்படி ஜெர்மனி வேண்ட அது மறுத்து விட்டது. அதேசமயத்தில் மேலும் ருமேனி யா எல்லையில் சோவியத்துடன் தகராறு எழுந்தது. ஜெர்மனி ருமேனியா தன் வட் டாரத்தைச் சேர்ந்ததென ரஷ்யாவிற்கு அறி வித்தது. அதற்குச் சரியான பதில் மாஸ்கோ விலிருந்து கிடைக்கவில்லை. எனவே ரஷ்யா ருமேனியாவில் ஆதிக்யம் செலுத்துமோ என்ற அச்சம் ஜெர்மனிக்குத் தோன்றியுள் ளது. அந்நிலை ஏற்பட்டால் பெட்ரோல் பஞ்சமேற்பட்டு ஜெர்மனி போரில் மடிய வேண்டிவரும். ருமேனியாவிலுள்ள பலர் சோவியத் ஆட்சி விரும்புவதாகக் காட்டி வருவது வெள்ளிடைமலை. ஆகவே ருமேனி யாவின் மீது எளிதில் பாய, ஹங்கேரியின் கிழக்கு எல்லை பெருக ஜெர்மனி தீர்மானித்து, டிரான்சில் வேனியாவில் 17,375 சதுரமைல் பரப்பு பிரதேசத்தை ஹங்கேரிக்களித்து விடவேண்டுமெனக் கூறி அதன் அண்டை நாடுகளினின்றும் காப் பதாகவும், ருமேனியாவிற்கு உறுதி அளித் துள்ளது. அதன் மீது பாயக் கூடியது சோவியத் நாடே. ஆகவே ஜெர்மனி அதன் மீதும் ஐயம் கொண்டுள்ளது என்பது

(397-ம் பக்கம் பார்க்க)

# முதியோர் கல்வி

[பி. சுப்ரமண்ய ஐயர், தியாகராஜநகர்]

நம் தேசத்திலேயுள்ள ஜாதிப் பிரிவுகள் போதாவென்று தற்காலத்துக் கல்வி முறையானது புதியதொரு பிரிவையும் உண்டாக்கிவிட்டது. அது படித்த ஜாதி, படியாத ஜாதி என்ற பிரிவாகும். இவ்விரு ஜாதியாரும் கலந்து வாழ்வது மிகவும் அரிதாக இருக்கிறது. படித்தவர்கள் படியாதவர்களிடையே நெருங்கிப் பழகவும், படியாதவர்கள் படித்தவர்கள் மத்தியில் வந்து கலந்து கொள்ளவும் சற்றேனும் முடிவதில்லை.

பள்ளிக்கூடங்களில் புத்தகப் படிப்பே பெரிதும் வழங்கப்பட்டு வருகிறது. குமாஸ்தா உத்தியோகம் போன்ற சில உத்தியோகங்களுக்கு மாணவர்கள் தயாரிக்கப்படுகிறார்கள். கைத்தொழில் செய்வதும் உடம்பினால் பாடுபடுவதும் ஈனத் தொழில் என்று படித்த வகுப்பினர் நினைத்திருப்பதால் அவர்களுக்குத் தொழிற்றிறமையும் தேக உழைப்பும் அவசியமில்லை என்ற அபிப்பிராயமும், தொழிலாளிகளுக்கும் உழைப்பாளிகளுக்கும் படிப்பு அவசியமில்லை என்ற அபிப்பிராயமும் உலாவி வருகின்றன.

ராமஸ்வாமி செட்டியார் ஒரு வீட்டுச் சொந்தக்காரர். அவர் வீட்டு வேலைக்காரனின் பெயர் ரங்கன். ரங்கனுக்குத் தன் கிராமத்துக்கு ஒரு கடிதம் எழுத அவசியம் ஏற்பட்டது. ஒருநாள் ரங்கன் தன் எஜமானனை யணுகி, "சாமி நான் ஒரு கடிதம் எழுதவேண்டும். இன்று சற்று முன்னதாகவே வீட்டிற்குப் போக அனுமதி தரவேண்டும்" என்று கேட்டான். அதற்குச் செட்டியார் "ரங்கா, தபால் கடிதத்தை என்னிடம் கொண்டு வந்து கொடு. எழுதவேண்டிய விஷயங்களைச் சொல்லு. ஒரு நிமிஷத்தில் நான் உனக்கு எழுதிக் கொடுக்கிறேன். உனக்கு அதைப்பற்றிக் கவலை வேண்டாம். இந்தச் செடிகள் எப்படித் தண்ணீர் இல்லாமல் வதங்கிப் போகின்றன பார். பத்துத் தோண்டி தண்ணீர் இழுத்துச் செடிகளுக்குக் கொட்டு" என்று சொன்னார். அப்படியே ரங்கன் தண்ணீர் இழுத்துச் செடிகளுக்கு ஊற்றினான். செட்டியார் ரங்கனுக்குக் கடிதம் எழுதிக் கொடுத்தார்.

படிப்பாளியான செட்டியார் தேக உழைப்புக்கு நன்மதிப்பும் கௌரவமும் அளிக்க மாட்டார். தண்ணீர் இழுக்கும் வேலை இழிவானதென்றும்படியாதவேலைக்கார ரங்கனுக்கே அவ்வேலை தகுந்ததென்றும் நினைப்பவர் நமது செட்டியார். ஆகையினால் அவர் தமக்கு நேர்ந்த தேகப் பயிற்சிக்கு அனுகூலமான வேலையையும் நற்சமயத்தையும் நழுவவிட்டார். இப்படி அநேக தடவைகளில் இவர் செய்ததனால் தேக வலிமையும் ஆரோக்கியமும் அற்று நடைப்பிணம் போல் ஆகி மேஜையின் அருகிருந்து பேனாப் பிடித்து வேலை செய்யவே லாயக்கானவராக இருக்கிறார். ரங்கனோ வென்றால் எழுதவும் படிக்கவும் தனக்கு நேர்ந்த சந்தர்ப்பத்தையும் அவசியத்தையும் நழுவவிட்டு எழுதப்படிக்க மாட்டாதவனாகவே காலங்கழித்து வருகிறான்.

ஒவ்வொரு மனிதனும் ஓர் அளவு எழுதப் படிக்கத் தெரிந்தவனாகவும், ஓரளவு தேக வலிமையும் ஆரோக்கியமும் பொருந்தியவனாகவும் இருப்பதுதான் விரும்பத்தக்கது. இவ்வாறின்றி ஒருவன் எழுதப் படிக்கத் தெரிந்தவனாக மட்டும் இருந்து, மற்ற நலன்களற்று இருப்பதும் அல்லது மிருக பலம் மட்டும் உடையவனாக இருந்து எழுதப் படிக்கச் சற்றேனும் அறியாதவனாகி இருப்பதும் தேச க்ஷேமத்திற்கேற்ற தன்மையாகாது. செட்டியார் கடிதம் எழுதித்தர மறுத்திருப்பாரானால் ரங்கனுக்கு எழுத்தறிய ஓர் சந்

தர்ப்பமும் அவசியமும் ஏற்பட்டிருக்கும். அவனும் அறிந்து கொண்டிருப்பான். தண்ணீர் இழுத்துச் செடிகளுக்கு ஊற்ற ரங்கன் மறுத்திருந்தால் செட்டியாருக்குத் தாமே தண்ணீர் இழுக்கச் சந்தர்ப்பமும் நிர்ப்பந்தமும் ஏற்பட்டிருக்கும். அவரும் அதைச் செய்யச் சக்தியும் சாமர்த்தியமும் பெற்று வாழ்வார். இவ்விருவருக்கும் இந் நலன்கள் உண்டாகாமலிருப்பதற்குக் காரணங்கள் என்ன? தப்பபிப்பிராயமும், சோம்பலும், சக்தியின்மையுமாம். சக்தி யின்மையால் ஒருவன் ஒரு வேலையை மேற்கொள்ளாமல் விட்டு விடுகிறான். இப்படி விடப்பட்டதனாலேயே சக்தி மேலும் குறைவடைகிறது. இப்படியே வேலை செய்ய வாய்க்கும் சந்தர்ப்பங்கள் ஒவ்வொன்றையும் விடும்போதெல்லாம் சக்தி படிப்படியாய்க் குறைந்து கடைசியில் அடியோடு நாசமடைகிறது.

மேலே காட்டப்பட்ட உதாரணத்தினால் படித்த வகுப்பிற்கும் படியாத வகுப்பிற்கும் உள்ள வித்தியாசத்தையும், அவ்வித்தியாசம் ஏற்படும் காரணத்தையும், அது மேலும்மேலும் எப்படி விருத்தியாகிறதென்பதையும் விளக்கினோம்.

அரசியல், சமூக சீர்திருத்தம், மதம், சுகாதாரம் ஆகிய இவை போன்ற விஷயங்கள் சம்பந்தமான பேச்சுக்களையும், பொதுக் கூட்டங்களையும் படித்தவர்கள் தங்கள் வாசஸ்தலங்களுக்கு அருகிலேயே நடத்துவதால் ஏழைத் தொழிலாளிகளும் படியாத வகுப்பினரும் இத்தகைய பேச்சுக்களிலும் பொதுக் கூட்டங்களிலும் கலந்துகொள்ளச் சௌகரியமில்லாதவர்களாக இருக்கிறார்கள். ஆகையினாலே அவர்கள் ஒதுங்கியே வாழ்கிறார்கள். "அது ஏதோ படித்தவர்களது வியவகாரம். அதில் நமக்கென்ன வேலை" என்று இருந்து விடுகிறார்கள்.

தொழிலாளிகள் வாழும் இடங்களும் அவைகளின் சுற்றுப்புறங்களும் அசுத்தமாக இருக்கின்றனவென்றால் அதற்குக் காரணமென்ன? படித்தவர்கள் அவ்விடங்களுக்குப் போவதே இல்லை. அவர்களுடைய இடங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்வதோ அல்லது அசுத்தமாக வைத்துக் கொள்வதோ அவர்களுடைய வேலையே என்றும், அது விஷயத்தில் தங்களுக்கு யாதொரு பொறுப்பும் இல்லை என்றும் படித்த வகுப்பினர் நினைக்கிறார்கள். "தொழிலாளிகளின் குடிசைகளும் அவைகளின் சுற்றுப் புறங்களும் சுத்தமாக வைக்கப்பட்டிருந்தால் நாங்கள் அங்கே போகத் தயங்கமாட்டோம்" என்று படித்தவர்கள் சொல்லலாம். படித்தவர்கள் தொழிலாளர் வாஸஸ்தலங்களுக்குப் போகத் தலைப்படுவதுதான் அவ்விடங்கள் சுத்தமாக வைக்கப்படுவதற்கு ஒரு தூண்டுகோலாக அமையும் என்பதே உண்மையாகும். அவ்விடங்கள் சுத்தமானால் நாங்கள் போவோம். நீங்கள் போனால்தான் அவ்விடங்கள் சுத்தமாகும் என்பது 'பயித்தியம் தெளிந்தால் கலியாணமாகும். கலியாண மானால் பயித்தியம் தெளியும்' என்பதுபோ லிருக்கிறதல்லவா?

தொழிலாளர்களது வாசஸ்தலங்களும் அவைகளின் சுற்றுப்புறங்களும் அசுத்தமான நிலைமையிலிருப்பதற்குப் படித்தவர்களது நடமாட்ட மின்மையே காரணமாவதுபோல் அவர்கள் சாதாரணமாகப் பேசிப் பழகும் அநாகரிகமான துர்ப்பாஷைக்கும் படித்தவர்களது நடமாட்டமின்மையையே காரணமாகச்சொல்லலாம்.

படித்தவர்கள் தருமநினைவை மேற்கொண்டு தொழிலாளிகளின் வாழ்க்கை முறையைச் சீர்திருத்த முன் வராவிட்டாலும் தங்கள் சுயநலம் கருதியேனும் முன் வருகிறார்களோ வென்றால் அதுவுமில்லை. தொழிலாளிகளின் தாழ்ந்த வாழ்க்கை முறையினால் தங்கள் சுயநலத்திற்குத் தீங்கு நேரும் என்று சில படிப்பாளிகள் நினைக்கிறார்கள். தொழிலாளிகளின் குடிசைகளுக்கு அருகில் உற்பத்தியாகும் ஈக்களும் கொசுக்களும் பணக்காரர் வீடுகளுக்குச் செல்லாவோ? குடிசைகளில் தோன்றும் தொத்து வியாதிகள் மற்ற விடங்களுக்குப் பரவாவோ? தொழிலாளிகளும் அவர்களது குழந்தை

களும் பழகும் துர்ப் பாஷை படித்தவர்களது குழந்தைகளின் காதுகளில் விழ நேர்ந்தால் அவர்களும் அந்த அநாகரிகப் பேச்சுக்களைப் பழகத் தலைப்படமாட்டார்களோ? ஆகையால் தரும சிந்தை அற்றவர்களுங்கூடச் சுயநலங் கருதியாவது தொழிலாளர் வாழ்க்கையை மேன்மைப்படுத்த உழைத்தல் இன்றியமையாததாகும்.

நமக்கு வேண்டாத அசுத்தப் பொருளை அகற்றி வெளியேற்றுவதைப் போலவே, சுகாதார விதிகளைக் கையாள இயலாத ஏழைத் தொழிலாளர்களையும் குடிசை வாசிகளையும் ஊருக்குப் புறம்பாயுள்ள ஒரு தனியிடத்தில் குடி ஏற்றுவதையே சரியான முறை என்று தற்காலத்தில் மக்கட் சமூகம் நினைத்திருக்கிறது. ஏழைகளுக்குப் படிப்பு வசதி தருவதும் சுகவாழ்வுக்கு வேண்டிய சௌகர்யங்களைச் செய்து தருவதும் சர்க்காருடைய பொறுப்பே என்ற ஒரு அபிப்பிராயமும் வேரூன்றி வருகிறது. எந்த நிமிஷத்தில் சர்க்கார் என்ற அமைப்பு நிறுவப்பட்டதோ அப்போதே தங்களுடைய பொறுப்பைச் சர்க்கார் எடுத்துக் கொண்டு விட்டதாக எண்ணி ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் மத்தியஸ்தமாக உள்ள சர்க்காரிடமிருந்து தத்தமக்கு வேண்டிய பொருள் உதவியும் சௌகரியமும் பெற முயல வேண்டும் என்ற போட்டித் தத்துவத்தை வாழ்விற்கு அடிப்படையாகக் கொண்டிருந்தால் ஏழைகளான படியாத மக்கட்குப் பணக்காரர்களான படித்த வகுப்பினர் எங்ஙனம் உதவி புரிந்து பொறுப்பேற்றுக் கொண்டு வாழ இயலும்?

## ஊழியர்கள் கவனித்துச் செய்யக்கூடிய சில காரியங்கள்

1. மாதம் இரு முறையாவது தொழிலாளர் குடிசைகளுக்கு மத்தியில் பொதுக் கூட்டங்கள் போடவேண்டும். நல்ல திறமைசாலிகளைக் கொண்டு பிரசங்கங்கள் நிகழ்த்தவேண்டும்.

2. பிரசங்கியாரும் கூட்டங்கள் ஏற்பாடு செய்பவரும் திடசித்தர்களாக இருக்கவேண்டும். கேட்க வருகிறவர்கள் இரண்டு பேரானாலும் இருநூறு பேரானாலும் உற்சாகம் குன்றாதவர்களாக இருக்க வேண்டும்.

3. குடிசைகளின் நடுவில் கூட்டம் போட்டாலும் முதலில் தொழிலாளிகள் தூரத்திலிருந்து வேடிக்கை பார்ப்பார்கள். அருகில் வந்து உட்காரவும் சம்மதியாமலிருக்கலாம். அவர்கள் வருவார்கள் என்பதை எதிர்பார்க்காமலேயே படித்தவர்கள் 15 அல்லது 20 பேர்களை வைத்துக் கொண்டு கூட்டத்தை நடத்திவிடவேண்டும். இப்படிப் பல தடவைகள் செய்தால் கொஞ்சம் கொஞ்சமாகத் தொழிலாளிகளும் வந்து கூட்டத்தில் கலந்துகொள்வார்கள்.

4. கூட்டத்திற்கு முன்னால் ஊர்வலமும் ஏற்பாடு செய்யவேண்டும்.

இப்படிப்பட்ட விசேஷ சந்தர்ப்பங்களில் தொழிலாளிகள் தங்கள் இடங்களைச் சுத்தமாக வைக்கவும் துர்ப்பாஷையைச் சற்றே நிறுத்தவும் முயலுவார்கள். இந்த நற்பழக்கம் நாளடைவில் விருத்தியாகும். பெரிய மனிதர்கள் வந்து போகுமிடம் சுத்தமாக இருக்கவேண்டும். அப்படி இல்லாவிட்டால் அவர்கள் வருந்துவார்கள். மனம் புண்ணுவார்கள். அவர்கள் காதில் நம்முடைய துர்ப்பாஷை விழுவது அவர்களுக்குக் கர்ண கடூரமாகவிருக்கும். அவர்கள் மிகவும் வருந்துவார்கள். அவர்களுக்கு இந்தக் கஷ்டங்களை நாம் தருவது தகாது என்ற உணர்ச்சியே ஏழை மக்கட்கு முதலில் உண்டாகும். இவ்வுணர்ச்சியே அவர்களது வாழ்வு மேன்மையுறுவதற்கு அஸ்திவாரமாக உதவுகிறது.

---



ஸ்ரீமத் சங்கராசார்ய ஸ்வாமிகள்

அருளிய

# ப்ரச்நோத்ர ரத்ந மாலிகை

[மனனத்தின் பொருட்டுத் தமிழ்ப் பாடல்களாக
வரகவி திரு அ. சுப்ரமண்ய பாரதியார் இயற்றியது.]

(25-8-40-தொடர்ச்சி)

(5) பானம்போல் மோகம் பயப்பதெது? பற்றே;
மானம்போ மாறுநமை வஞ்சிக்கும்—ஈனமெவை?
பஞ்சவிட யம்; பாவப் பைங்கொடிஎன்? ஆசை; மனம்
அஞ்சுவைரி என்? உழையா மை

பானம் - கள்; பஞ்சவிடயம் - ஸ்ப்த, ஸபரிச, ரூப, ரஸ, கந்தம் என்னும் தன் மாத்திரைகள்; உழையாமை - முயற்சி செய்யாமை.

(கருத்து) கள்ளைப் போல் ஆசையை மூட்டுவது பற்றேயாம்; நம்மை வஞ்சிப்பவையோ ஸப்தாதி விஷயங்களேயாம்; பாவத்துக்கு ஆசையே ஒரு கொடி போல்வதாம். சோம்பலே நமக்குப் பகையாம்.

(6) அச்சந் தனையிங் களிப்ப தெது? மரணம்;
உச்சங் குருடனிலும் உள்ளவன்யார்?—துச்ச
இராகனே; சூரனெவன்? ஏந்திழைக் கண்ணம்பில்
விராகனுய் அற்றேன் மிகை.

உச்சம் - உயர்வு; துச்சம் - அற்பம்; இராகன் - ஆசையுள்ளவன், அதாவது காமி; விராகன் - நிராசையுள்ளவன்; மிகை - கெடுதி.

(கருத்து) பயத்தை உண்டுபண்ணுவது மரணம்; குருடனிலும் விசேஷித்தவன் காமி; பெண்களின் கண்ணுகிய வலையில் அகப்படாதவனே சமர்த்தன்.

(7) ஆரமுதம் போன்றுகரு *ஞஞ்சலியி னுலருந்து
நீரதெது? நற்போதம்; நீணிலத்திற்—சீரடைதற்
கான முகாந்தரமென்? ஆண்மைகொடு நீக்குதலாம்
ஈனமுறு யாசகத்தை யே.

கருஞ்ஞசலி - கர்ணம் + அஞ்சலி. கர்ணம் - காது. அஞ்சலி - வணக்கம்; நீரது - தன்மையுடையது; நற்போதம் - குரு உபதேசம்.

* (இரண்டு கைகளையும் சேர்த்துக் குவித்துக்கொள்வது அஞ்சலி. காது குவிந்திருப்பதால் அஞ்சலி என்று சொல்லப்பட்டிருக்கிறது.)

(கருத்து) குருவின் உபதேசமே தேவாமிர்தம்போல் அநுபவிக்கத் தக்கது; இரவாமையே பெருமை பெறும் உபாயம்.

(8) காடொப்ப தென்? மடவார் கையாறே; ஆண்மையனர்?
நீடைம்பா லார்மயக்கில் நேராதோன்—கூடுமிடி
யாது? மனம் பேருவகை யெய்தாமை; கீழ்மைஎன்? எப்
போதுமிரந் துண்ணப் புகல்.

கையாறு - ஒழுக்கம்; சரித்திரம். நீடு - நீண்ட; ஐம்பாலார் - கூந்தலையுடைய பெண்கள்; மிடி - தரித்திரம்.

(கருத்து) பெண்களின் நடவடிக்கையே அளவு கடந்திருப்பது; அவர்களுடைய மயக்கிற் சிக்காதிருப்பவனே பராக்ரமசாலி; சிந்தையினிடத்துத் தோன்றும் குறைவே தரித்திரம்; யாசகமே இழிந்த தன்மையாம்.

(தொடரும்)

# *நோக்குகள்

[கே. என். சுந்தரேசன், எம். ஏ. பர்ஹாம்பூர்.]

நோக்கெனது அவள்நோக்கை எதிர்தலும், அஞ்சிஆங்கே
தீக்குளிக்கும் துன்பமொடு விரைந்தகலும் அவள்கண்ணே.

பிலியர்டு ஆட்டத்தில் பந்தொன்று
நலித்துப் பிறனதைத் துரத்தல்போல்,
வலைப்பைஎங்கோ அறமறைத்து மீளும்எனது

பையிலிடல் விருதுஅன்றோ ?
மையலெனதும் திருப்பெறுமோ ?

யாமிருவர் மாற்றி ஆடும்இவ் விழிமலர்
ஊமர்ஆட்டம், நலங்குநாட் பூச்செண்டு திரிதலேயோ ?

நோக்கெனதை அவள்நோக்கு எதிர்தலும், அஞ்சிஆங்கே
தாக்கிடியின் மின்னெதிர்போல் கூசிஒயும் என்கண்ணே.

சினிமாக் கொட்டகையில் இருள்சூழின்,
இனித்தோன்றும் திரைப்படம் என்பதுபோல்
மனமெனது பாய்கிறது நீளடிகள்.

பாட்டொன்றும் செவிகேளேன்,
கூட்டொளியின் அவிர்வென்னே !

யாமிருவர் தோய்த்துத்தோய்த்துப் பூசும்இச் சித்திரக்கோல்
ஓமர்ஆட்டம், மணக்கூடப் பீடிகை வரைதலேயோ ?

நோக்கெமது பிறர்நோக்கை எதிர்தலும், அஞ்சிஆங்கே
மேக்கூரை தொத்தநாடும், வௌவால்போல் எம்கண்ணே.

வலைவிரித்து அகப்படுத்த சிலந்திதன்
புலப்படாச் சோதிநூல்கள் விரித்தல்போல்,
குலவேறேம், சூழ்கிறோம் பகைக்காதல்.

தலைகீழாய்ப் பட்டினியும்
பலகழிக்கக் கஷ்டமென்றோ

யாமிருவர் பாவுநூலோடு மின்னும்இக் குழற்பாய்ச்சற்
காமர்ஆட்டம் திருமணநாட் புதுக்கூறை நெய்தலேயோ ?

..................

---

*. நாணமும், துணிச்சலும், ஒருங்கு கலந்து காணும்
காதற் பார்வைகளை உன்னுகிறான், கானை.

# எனது அனுபவம்

[ஸ்ரீமதி கமலாபத்மனபன், கிருஷ்ணராஜ ஸாகர்]

மத்தியானம் சுமார் இரண்டு மணி இருக்கும். வீட்டில் என்னைத் தவிர வேறு ஒரு பிராணியும் இல்லாதபடியால நல்ல நிசப்தம் குடிகொண்டிருந்தது. கதை, கட்டுரை எழுத இதைவிட வேறு நல்ல சமயம் கிடைக்குமா? "I am the Monarch of all I survey" என்ற ஆங்கிலக் கவிதை ஒன்றைச் சொல்லிக் கொண்டே நான் பேனவையும் பேபரையும் எடுத்து வைத்துக் கொண்டேன். நான் சொல்லிக் கொண்டிருந்த கவிதையைப் பாதியில் நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் யோசிக்க ஆரம்பித்தேன். சுமார் ஐந்து நிமிஷங்களில் நான் எழுதப்போகும் சிறு கதையின் "ப்ளாட்டை" (Plot) கற்பனை செய்து கொண்டேன். பிறகு கதையை ஆரம்பித்து 'விறுவிறு' என்று பத்து வரிகள் மட்டும் எழுதினேன். இதற்குள் வீதிப்புறமிருந்து "மாமி!" என்று யாரோ ஒரு சிறிய பெண் கூப்பிடுவதைக் கேட்டு எழுந்து போய்க் கதவைத் திறந்தேன். எங்கள் வீட்டிற்கு இரண்டு வீடு கள்விட்டு அடுத்த வீட்டிலிருக்கும் சிறுமி பட்டு, நான் கதவைத் திறந்தது தான் தாமதம், என்னையும் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தாள்.

"என்னடி பட்டு, எதற்காக வந்தாய்?" என்று நான் கேட்டேன்.

"மாமீ, பத்மா எங்கே?" என்றாள் அப்பெண். "பத்மா ஸ்கூலுக்குப் போயிருக்கிறாள். நீ ஏன் போகவில்லை?" என்று நான் கேட்டேன்.

"நான் ஒரு மணிக்குச் சாப்பாட்டுக்காக ஸ்கூல் விட்டபொழுது ஆத்துக்கு வந்தேன். அம்மா மறுபடியும் ஸ்கூலுக்குப் போக வேண்டாம்னு சொல்லிவிட்டாள். அம்மாவும் பாட்டியும் முறுக்கு சுத்திண்டு இருக்கா. என்னைக் குழந்தையைப் பாத்துக்கச் சொன்னு" என்றாள் பட்டு.

"அப்படியானல், நீ ஏன் குழந்தையைப் பார்த்துக் கொள்ளாமல் இங்கு வந்து விட்டாய்? ஓடு, ஆத்திற்கு, இல்லாவிட்டால் அம்மா அடிப்பாள்" என்றேன்.

"இல்லே, மாமி, நான் குழந்தையைத் தொட்டிலிலே போட்டு வீசி வீசி ஆட்டித் தூங்கப் பண்ணிட்டேன். நான் ஆத்திலே இருந்தா சும்மா முறுக்கு கேக்கறேன்னு எங்கபாட்டி தான் என்னை ஓங்காத்துக்குப் போகச் சொன்னு" என்று பதிலளித்தாள் பட்டு.

நான் சிரித்துக் கொண்டே "சரி, வாயை மூடிக் கொண்டு, சேஷ்டை ஒன்றும் செய்யாமல், இங்கு உட்கார்ந்து கொண்டு இந்த பொம்மைப் புஸ்தகத்தைப் பார்த்துக் கொண்டிரு" என்று சொல்லி அவளிடம் ஒரு பொம்மைப் புஸ்தகத்தைக் கொடுத்து ஒரு மூலையில் உட்காரவைத்து, நான் கதையை எழுதத் தொடங்கினேன். சில நிமிஷங்கள் தான் எழுதியிருப்பேன்.

"மாமீ!"

"என்னடீ!" என்றேன் எரிச்சலுடன்.

"தூத்தம் கொஞ்சம் வேணும் மாமி. நான் இங்கே வரப்போ முறுக்கு தின்னுண்டே வந்தேன். ஒரு துண்டு தொண்டேலெ சிக்கிண்டுடுத்து! அப்போ பிடிச்சு எச்சலை முழுங்கி முழுங்கி அதை உள்ளே தள்ளனும்னு பாக்கறேன். முடியல்லே மாமி" என்றாள் பட்டு.

"இதேதுடா சனியன்!" என்று நினைத்துக் கொண்டே எழுந்து சென்று ஒரு டம்ளர் தீர்த்தம் கொண்டு வந்து அந்தப் பெண்ணினிடம் கொடுத்துவிட்டு, "பட்டு, இதைக் குடித்துவிட்டு கம்னு இருக்க வேண்டும்! ஏதாவது என்னைத் தொந்தரவு செய்தால் ஆத்திற்கு ஓட்டி விடுவேன்" என்று எச்சரித்தேன்.

மறுபடியும் எழுத உட்கார்ந்தேன். ஏதாவது கட்டுரை எழுதும் பொழுது, நாம், இடையில் அடிக்கடி எழுந்து செல்ல நேரிட்டால், நமக்கு ஆரம்பத்தில் ஏற்

பட்டு சுறுசுறுப்பும் உத்ஸாகமும் குறைந்து விடுகின்றன. கற்பனை சக்தியும் நமக்கு 'டிமிக்கி' கொடுக்கிறது. இரண்டு வரிகள் எழுதிவிட்டு, பிறகு ஐந்து நிமிஷங்கள், இடக் கை விரல்களின் நகங்களின்மேல் பேனாவினால் புள்ளி வைத்துக் கொண்டோ, அல்லது வீட்டுக் கூரையை அண்ணாந்து பார்த்துக் கொண்டோ, மேலே என்ன எழுதுவது என்று தோன்றாமல் விழிக்க வேண்டியிருக்கிறது. என் நிலைமையும் இப்பொழுது இப்படித்தான் இருந்தது.

நான் சும்மா உட்கார்ந்திருப்பதைக் கவனித்துவிட்ட பட்டு, "யாருக்கு மாமி, காயிதம் எழுதறேள்?" என்று கேட்டாள்.

"எங்க அக்காவுக்கு" என்று இரண்டு வார்த்தைகளில் பதில் சொல்லிவிட்டு மறுபடியும் எழுதத் தொடங்கினேன்.

"ஒங்க அக்கா எந்த ஊரில் இருக்கா மாமீ?" நான் மௌனம் சாதித்து எழுதிக் கொண்டிருந்தேன். அப்பொழுது பட்டு மெதுவாக எழுந்துவந்து என் நாற்காலியின் பின்புறம் வந்து நின்றாள். அவளுடைய மூச்சு சூடாக என்மேல் பட்டதும் நான் அருவருப்புடன் "பட்டு, தூரநில்" என்று இறைந்தேன்.

பட்டு பயந்து இரண்டடிகள் நகர்ந்தாள். அவ்வளவுதான்! அவள் காலடியிலிருந்த மசிப்புட்டியை உருட்டிவிட்டாள். நான் சற்று முன்பு என் பேனாவுக்கு மசி நிறைத்துக்கொண்டு அஜாக்கிரதையினால் மசிப்புட்டியை மூடாமல் கீழே வைத்து விட்டேன் என்பது என் நினைவுக்கு வந்தது. அப்பொழுது எனக்கு வந்த ஆத்திரத்தில் என் பெண்ணாக இருந்தால், 'பளீர் பளீர்' என்று நான்கு அறைகள் வைத்து வெளியேதள்ளிக் கதவை சாத்தியிருப்பேன்! ஊரார் வீட்டுப் பெண்ணாயிற்றே! அவள் நமக்கு எவ்வளவு உபத்ரவம் வேண்டுமானாலும் கொடுக்கலாம்! நாம் எதாவது இரண்டு வைதால்கூடத் தப்புதான். என்று நினைத்துக்கொண்டு "இந்தா, பட்டு நீ ஆத்திற்குப் போ. இனிமேல் இங்கு இருக்கக்கூடாது" என்று சொல்லி அவளைப் பலவந்தமாய்க் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் வாசல் வரைக்கும் விட்டு விட்டுக் கதவைத் தாளிட்டேன். உள்ளே நுழைந்ததும், ஸிமென்ட் தரையில் கன்னங்கரேலென்று, பட்டுவினால் உருட்டப்பட்டுச் சிந்தியிருந்த, மசி காட்சி அளித்தது. மிகுந்த அலுப்புடன் ஒரு பழைய துணியைக் கொண்டுவந்து மசியைத் துடைத்து விட்டு மசிப் புட்டியையும் எடுத்து வைத்தேன். பிறகு எழுத ஆரம்பித்தேன். நான் கதை எழுத ஆரம்பித்து அரைமணி நேரத்திற்கு மேலாகி விட்டபோதிலும் கூட ஒருபக்கம்தான் எழுதி முடித்தேன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் வீதிக் கதவை மறுபடியும் யாரோ தட்டும் சப்தத்தைக்கேட்டு, அந்தப் பெண் பட்டுதான் ஆத்திற்குப் போகாமல் இங்கேயே நின்று கொண்டு கதவை இடிக்கிறாள் என்று நான் முதலில் நினைத்தேன். ஆனால் என் பெயரைச் சொல்லி யாரோ கூப்பிடுவதையும் யாரோ பெரியவர்கள் குரல்போலிருப்பதையும் அறிந்து எழுந்துபோய்க் கதவைத் திறந்தேன். அடுத்தகத்து ஐயங்கார் மாமி கையில் ஒரு வெள்ளி டம்ளருடன் நின்றுகொண்டிருந்தாள்.

"ஒரு டம்ளர் பால் இருந்தால் கொடேன். சாயந்திரம் பால் வாங்கியதும் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். இப்பொழுதுதான் மூன்றுமணி ரயிலில், மைசூரிலிருந்து எங்க மாமா பிள்ளையும் அவன் அகமுடையாளும் வந்தார்கள். நாங்கள் எல்லோரும் இரண்டுமணிக்கே காபி சாப்பிட்டு விட்டோம். மிஞ்சின துளிபாலையும் மோரில் கொட்டிவிட்டேன்" என்று புராணம் படிக்க ஆரம்பித்தாள். நான் பதில் பேசாமல், டம்ளரை வாங்கிக்கொண்டு, உள்ளேபோய்ப் பாலை எடுத்துவந்து கொடுத்துவிட்டு அவள் போகமாட்டாளா என்று ஆவலுடன், ஒருகையால் வாசல் கதவைப்பிடித்த வண்ணம், எதிர்பார்த்து நின்றேன்.

"என்ன தளிகை இன்றைக்கு உங்காத்தில்?" என்று பேச்சுக்கொடுக்க ஆரம்பித்தாள் அந்த மாமி.

நான் எதையோ சொல்லித் தொலைத்து, ஊரிலிருந்து வந்தவர்களுக்குச் சீக்கிரம்

காபிபோட்டுக் கொடுக்கும்படி சொல்லிப் பார்த்தேன். ஆனால் அவள் அசையும் வழியாகக் காணோம். தன் மாமா பிள்ளை பெங்களூரில் பெரிய வேலையில் இருக்கிறானென்றும், அவன் மனைவி பிறந்தகத்திலிருந்து ஏராளமான சீர்கொண்டு வந்திருக்கிறாளென்றும் அவள் உடம்பு முழுவதும் வயிர நகைகள் குலுங்குகின்றன வென்றும் வர்ணிக்கத் தொடங்கி விட்டாள். இப்படிச் சுமார் பதினைந்து நிமிஷங்கள் வரைக்கும் பேசிக்கொண்டே நின்றாள். பிறகு அவள் பெண் அவர்கள் வீட்டுத் திண்ணையின்மேல் நின்றுகொண்டு "அம்மா, கெட்டில் தண்ணி கொதித்து வழிகிறது. சீக்கிரம் வா" என்று கூவிய பிறகுதான் போய்ச் சேர்ந்தாள்.

நான் அந்த மாமியைச் சபித்துக்கொண்டே வீதிக்கதவைத் தாளிடாமல், உள்ளே வந்து, கதையை விட்டிருந்த இடத்திலிருந்து தொடர்ந்து எழுதினேன். நான் ஊக்கமாக எழுதிக்கொண்டிருந்த பொழுது என் அறையின் வாசற்படியின் அருகில் யாரோ நின்று கனைப்பதுபோல் தோன்றிற்று. சட்டென்று நிமிர்ந்து பார்க்கவும், தன் உடம்பு முழுவதும் கருப்புக் கம்பளியினால் சுற்றிப் போர்த்திக்கொண்டு எங்கள் வீட்டு ஆள் நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன்.

"அம்மா, எனக்கு திடீர்னு குளுரு ஜொரம் வந்திடுச்சுங்க. என்னாலே இன்னைக்கி வேலைசெய்ய முடியாதுங்க" என்றான் 'வடவட, என்று நடுங்கிக்கொண்டே. அவனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

"உன்னை யார் ஜுரத்துடன் இதைச் சொல்ல இங்கு வரச் சொன்னது? உன் பிள்ளையை அனுப்பி யிருக்கக் கூடாதோ? வீட்டுக்குப் போய்ப் படுத்துக்கொள், போ" என்று சொல்லிவிட்டு அவனுக்கு இரண்டு கொய்னா மாத்திரைகளை எடுத்துக் கொடுத்துவிட்டு அவனை அனுப்பினேன். இதற்குள் மணி நாலேகால் ஆகிவிட்டது. கதையை இரண்டு மணிக்கே எழுத ஆரம்பித்தேன்! இன்னும் மூன்று பக்கங்கள் கூட முடியவில்லை! என்ன வெட்கக்கேடு! ஐந்து மணி வரையில் என்னை யாரும் தொந்தரவு செய்யாமலிருந்தால், நான் ஆரம்பித்த கதையை முடித்துவிடலாமென்ற நம்பிக்கையுடன் எனது அறைக்குச் சென்றேன். அந்த க்ஷணமே "அம்மா" என்று வீதியில் யாரோ கூப்பிட்டார்கள்.

"யாரது?" என்று ஒரு அதட்டல் போட்டேன். "நான்தான் அம்மா முனுசாமி. டாக்டர் வீட்டு அம்மா ஐந்து ரூபாய் நோட்டுக்குச் சில்லறை வாங்கிவரச் சொன்னாங்க" என்றான் டாக்டர் வீட்டு ஆள்.

நான் இவ்வளவு நாழியாக அடக்கி வைத்திருந்த ஆத்திரமும் கோபமும், பாவம், அந்த முனுசாமியின் மேல் பாய்ந்தன.

"சீ போடா! இங்குச் சில்லறையுமில்லை. கல்லறையுமில்லை. கஜானா பாழ் போகிறதென்று நினைத்துக் கொண்டாளோ உங்களம்மா? ஒருவர் மாற்றி ஒருவர் வந்து இப்படிக் கழுத்தை அறுக்கிறீர்களா? இனிமேல் இந்த வீட்டு வாசல் ஏறு சொல்கிறேன்! நாயை அவிழ்த்து 'சூ' விடுகிறேன். பத்திரம்!" என்று அவன் மேல் சீறினேன்.

என்றுமில்லாமல் நான் இப்படி அநாவசியமாய்க் கத்துவதைக் கண்ட அந்த ஆள் ஒரு மாதிரி சிரித்துக் கொண்டே ஏதோ முணு முணுத்த வண்ணம் திரும்பிச் சென்றான்.

"அப்பப்பா! வீட்டில் நமக்குப் பிச்சுப் பிடுங்கல் இல்லாவிட்டாலுங்கூட ஊரார் செய்யும் உபத்ரவம் தாங்க முடியவில்லையே! என்னுடைய சொந்த வீட்டில் ஏகாந்தமாய் உட்கார்ந்து நிம்மதியாக ஒரு சிறு கட்டுரையை எழுதி முடிக்கக்கூட எனக்குச் சுதந்தரம் இல்லையா? இனிமேல் யார் வேண்டுமானாலும் வந்து கூப்பிடட்டும்! நான் பதிலே சொல்லப் போகிறதில்லை! கதவைச் சாத்தித் தாளிட்டு விடுகிறேன். வந்தவர்கள் கதவை இடித்து இடித்து அலுத்துத் திரும்பிப் போகட்டும்!" என்று மனத்திற்குள் சொல்லிக்கொண்டு வீதிக் கதவை இழுத்துச் சாத்தப் போனபொழுது, ஆபீஸ் ஆள் 'விர்' ரென்று ஸைகிளில் வந்து இறங்கித் தன் கையிலிருந்த ஒரு 'ஸ்லிப்'பை என்னிடம்

(அடுத்த பக்கம் பார்க்க)

# இந்தியாவின் பெருமை

சென்ற சில வருஷங்களாக இந்த ராஜ தானியில் ஸம்ஸ்கிருத கல்வி அபிவிருத் திக்கு விரோதமாகக் கிளர்ச்சிகள் உண்டா யிருக்கின்றன. அவை அரசியல் பிரச்னை களில் வந்து நின்றன. ஆனால் அவ்வித மான பிரச்னைகளைக் கவனியாமல் உண்மை நிலைமையை எடுத்துக் காட்டுவது அவசி யம். அவ்விதமாக அரசியல் சமுதாய பிரச்னைகளில் ஸம்ஸ்க்ருதத்தைப் புகுத்தி அதன் அபிவிருத்தி வைத்திருப்பவர்களை விலக்கி விட்டுப் பார்த்தால் ஸம்ஸ்க்ருதத் தைக் கவனியாமல் இருப்பவர்களை இரண்டு வகுப்பினர்களாகப் பிரிக்கலாம். இப்பொழுது இருக்கும் நிலைமையில் கவ னித்தால், ஸம்ஸ்க்ருதக் கல்வி எந்த விதத் திலும் பிரயோஜனமற்றது என்று தள்ளு பவர்கள் ஒரு சாரார். "ஸம்ஸ்க்ருதம் நமக்கெதற்கு" என்று பராமுகமாக இருப் பவர் மற்றொரு கோஷ்டி. "ஸம்ஸ்க்ரு தக் கல்வி உபயோக மற்றது" என்று கூறுபவர்களை "உபயோகம்" என்ற பதத்தின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். ஸம்ஸ்க்ருதப் படிப்பிலிருந்து நேர் முக மாக ஒன்றும் பிரயோஜனம் கிடைக்கா விடினும், மறைமுகமாகவாவது ஸம்ஸ்க்ரு தம் பிரயோஜனமளிக்கிறது என்பது நன்கு விளங்குகிறது. தேசத்தில் ஜனங் களுக்குத் தங்கள் கலாசார ஐக்கியத்தைப் போதித்து, அவர்களுக்கு "நாங்கள் ஸம்ஸ்க்ருதக் கல்வியினின்றும் கிளம்பிய ஒரே பொதுவான கலாசாரத்தைப் பெற் றோம்" என்கிற நினைவு மூட்டி ஜனங்களை ஒன்றுபடுத்துவதில் ஸம்ஸ்க்ருதக் கல்வி மிகவும் சக்தி வாய்ந்தது. அதனால் ஜனங் களுக்கு தேசிய உணர்ச்சியும் உண்டாகி றது. நமது தேசத்து ஹிந்துக்கள், தாங் கள் ஓர் பொதுவான கலாசாரத்தில் பிறந்து அப்பொதுவான ஆஸ்தியைத் தங் கள் முன்னோர்களிட மிருந்து பெற்றார் கள் என்பதை எவரும் மறுக்க முடி யாது. இந்த உணர்ச்சிதான் இன்றும் குழம்பிக் கிடக்கும் ஹிந்துக்களை ஒன்று சேர்க்கிறது. எனவே ஸம்ஸ்க்ருதக் கல்வி எங்கும் பரவவேண்டும். கலாசாரம் என்ன, என்பதை நாம் தெரிந்து கொண் டிருந்தால், பின், ஏன் நாம் நம் ஓய்வு நேரங்களை இவ்வித உன்னத நோக்கங் களையுடைய ஸம்ஸ்க்ருதக் கல்விப் பயிற்சி யில் செலவழிக்காமல் வீணாக்கவேண்டும்?

—ஸர் எஸ். வரதாச்சாரியர்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

நீட்டினான். அது என் கணவர் ஆபீஸி லிருந்து எழுதி அனுப்பிய சிட் (Chit). வழக்கப்படி, அவர்வீட்டில் மறந்துவைத்து விட்டுப்போன ஆபீஸ் காகிதங்களை அனுப் பும்படி எழுதி யிருப்பார் என்று நினைத் துக் கொண்டு சீட்டைப் படித்தேன்.

"மைசூரிலிருந்து சில நண்பர்கள் அணை (Dam) பார்க்க வருவதாக இப் பொழுதுதான் 'போன்' செய்தார்கள். (நாங்கள் வசிப்பது பேர்போன கண்ணம் பாடி அணை கட்டப்பட்டிருக்கும் கிருஷ்ண ராஜ ஸாகரம் என்ற ஊரில் என்று வாசகர் களுக்கு இங்குத் தெரிவிக்கிறேன்.) மாலை ஆறு மணி ரயிலில் வருகிறார்களாம். முடிந் தால் ஏதாவது "லைட்" டிபனும் காப்பி யும் செய்துவை. அதிகத் தொந்தரவு வைத்துக் கொள்ளாதே" என்று சீட்டில் எழுதப்பட்டிருந்தது.

எனக்கு அழமாட்டாத துக்கம் வந்தது. அந்தத் துண்டுக் கடிதத்தைக் கசக்கி எறிந்துவிட்டு, ஆபீஸ் சேவகனை ஒரு முறை விழித்து "இன்னும் என் நிற்கி றாய்? போய்த்தொலையேன்!" என்று வெறுப் புடன் சொல்லிவிட்டுக் கதவைப் படீ ரென்று சாத்தினேன். பிறகு என் அறைக்குச் சென்று நான் எழுதிக்கொண் டிருந்த கட்டுரையை எடுத்துச் சுக்கல் சுக்கலாய்க் கிழித்து வேஸ்ட் பேபர் பாஸ் கெட்டில் போட்டேன்.

"நான் கதை எழுதி நாசமாய்ப் போனேன்! இன்றைக்கு எந்த வேளை யில் எழுத உட்கார்ந்தேனோ தெரிய வில்லை! என்று முணு முணுத்த வண் ணம் அடுப்பை மூட்டச் சென்றேன்."


SUNLIGHT SOAP
LEVER BROTHERS (INDIA) LIMITED
SUNLIGHT SOAP
SUNLIGHT SOAP
SUNLIGHT SOAP

# சந்திப்பு

"கார்த்திகை"

நாங்கள் இரண்டு பேரும் சந்தித்தோம். அந்தச் சந்திப்பினுல் எனக்குண்டான மன மகிழ்ச்சியை விவரிக்க வார்த்தைகளால் முடியாது. "அப்படி யென்ன அந்தச் சந்திப்பில், என்று கேட்கிறீர்கள்?" சரிதான்! உங்களுக்குத் தெரியாது அதன் மகத்வம். ஆம்; உண்மையாகவே நான்கு வருடங்கள் பிரிந்திருந்து கூடினுல் சந்தோஷம் இருக்காதா? சரியாய் நான்கு வருஷங்கள் ஓடிவிட்டன. நேற்றுத்தான் அவனைக் கண்டேன். கண்டதும் என் உடலில் அப்படியே மின்சாரம் பாய்ந்தது போலாயிற்று. ஒரு கணம் என்னைச் சந்தேக தேவதை ஆட்சி புரிந்தது. பாழும் சந்தேகம்! அதற்கு நேரமுந் தெரியாது. பொழுதும் தெரியாது. எவ்வளவு நாட்களோ பார்ப்போம், பார்ப்போம் என்று பூத்துப் போயிருந்த கண்கள் குளிர்ச்சி அடையும் நேரத்திலா சந்தேகம் நுழைய வேண்டும்?

அவன் யார் தெரியுமா? எனது நண்பன் சாக்ஷாத் சந்திரசேகரன் தான். இல்லை; அவன் என் நண்பன் இல்லை. என் மாஜி நண்பன்! நானும் சந்திரசேகரனும் பள்ளிக்கூடத்து நண்பர்கள். எட்டாவது வகுப்பிலிருந்து எஸ். எஸ். எல். ஸி. வகுப்பு வரை ஒன்ருய்ப் படித்தோம். அவனுடன் பழகிய மறுதினமே அவன் என் வாழ்க்கையில் ஒரு அங்கமாகி விட்டான். அவனில்லாமல் கழியும் ஒவ்வொரு கணமும் எனக்கு ஒவ்வொரு யுகமாகத் தோன்றும். சந்த்ரு இல்லையானுல் சாப்பாடும் வேண்டாம். அவனில்லாமல் நான் எப்படிச் சாப்பிட முடியும்? உணவு தான் உள்ளே செல்லுமா?

நாங்கள் இருவரும் இணைபிரியா நண்பர்களா யிருந்தோம். என்னிடத்தில் அவன் அபார அன்பு கொண்டிருந்தான் என்பதில் சந்தேக மில்லை. ஆனுல் சற்று முன் கோபி. அதைத் தவிர அவன் தங்கக் கம்பி. அந்தப் பாழாய்ப் போகிற கோபம் மட்டும் அவனிட மில்லாமலிருந்தால் அவனுக்கு ஒரு கோயில் கட்டி அதில் அவனை வைத்துப் பூஜித்திருப்பேன்.

நாம் வாழ்க்கையில் அநேகரைச் சந்திக்கிறோம்; பேசுகிறோம்; கூடிக் குலாவுகிறோம். ஆனுல் அவர்களிட மெல்லாம் நமக்குப்பிரேமை உண்டாவதில்லை. சில பேர் 'சிடுசிடு' வென்று எரிந்து விழுகிறார்கள். அவர்கள் நமக்குப் பிடித்திருக்கிறார்கள். அவர்கள் நம்மிடம் பேசாவிட்டாலும் நாமாகச் சென்று அவர்களிடம் பேச்சுக் கொடுக்கிறோம். இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவகையான அன்புதான் இதற்குக் காரணம்.

சந்த்ருவையும் என்னையும் இந்த அன்புதான் பிணைத்திருக்கிறது. அவன் என்னை இகழ்ந்து பேசி யிருக்கிறான்; கேலி பண்ணி யிருக்கிறான்; கன்னத்தில் அடித்து மிருக்கிறான். எனக்கு அவனிடம் கோபமோ, வெறுப்போ கிடையாது. அதே சமயத்தில் யாராவது அவனை அவதூருகப் பேசிவிட்டால் என் மனம் கொதித்துவிடும். அதிகம் கூறுவானேன்? அவனுக்காக நான் எத்தகைய தியாகத்தையும் செய்யத் தயாரா யிருந்தேன்.

சென்ற மாதம் திடீரென்று அவன் நினைவு வந்தது. ஆழ்ந்து யோசித்தால் அவன் நினைவு வரவேண்டிய நியாயமில்லை. ஒரு காலத்தில் என் வாழ்க்கை விளக்கின் ஒளியா யிருந்த அவனை நான் மறந்து போயிருந்தேன். அவன் நினைவு வந்ததும் என் உடலை யாரோ உலுக்குவது போன்றிருந்தது. என்னை யறியாமலே "சந்த்ரு, சந்த்ரு" என்ற வார்த்தைகள் புறப்பட்டன. அதுவரை என் மனத்தில் குடிகொண் டிருந்த சாந்தி தேவி எங்கோ ஓடி மறைந்து விட்டாள். சாந்தி நீங்கிச் சலிப்புண்டாகியது. நெஞ்சக் கடலில் அலைகள் குமுறி எழுந்தன. என் இதயச் சாளரத்தைத் திறந்து பார்த்தேன்.

கடந்த நாட்களை எண்ணி எண்ணி மனம் புண்ணுகியது. சந்த்ருவை மீண்டும் பார்ப்போம் என்ற எண்ணம் பட்டுப் போயிருந்தது; அது துளிர்க்க ஆரம்பித்துவிட்டது போல் தோன்றியது.

என்னையே நான் நொந்து கொண்டேன். அவன்தான் முன் கோபியாயிற்றே. அப்படியிருந்தும் பாவி, நான் ஏன் கோபப்பட்டேன். கோபப் படாமலிருந்தால் அவன் என்னை விட்டுப் பிரிந்திருப்பானு? அவன் பிரிந்தான். போகிற போக்கில் “இனி உன் முகத்தில் விழிக்கிறதில்லை” என்று கூறிப் போனுன். ஹா! தெய்வமே! இந்த ஏழைக்கும் சாந்தியுண்டா? அவனைக் கண்டு, “அப்பா சந்த்ரு, என்னை மன்னிக்க மாட்டாயா? என் வீட்டில் வந்து ஒரு வாய் அன்னம் புசிக்க மாட்டாயா?” என்று அழைக்கும் சமயம் வராதா!

ஒவ்வொரு இரவிற்கும் விடிவு உண்டு. விடியாமலே இரவு இருக்க முடியாதல்லவா? அந்தத் தைரியந்தான் என்னை நடமாடச் செய்கிறது. அவனை நான் ஏன் நினைக்க வேண்டும்? அவன் எனக்கு பந்து கூட இல்லையே! என்றெல்லாம் எண்ணுவேன். அது மனம் கசந்த வாழ்வினின்றும் உதயமாகும். உண்மை வேறு.

உள்ளபடியே நானும் யோசித்து யோசித்துப் பார்த்தேன். எனக்கோ சாப்பாட்டிற்குக் கவலையில்லை. மனைவி தங்கச் சிலை போல் நிற்கிறுள். அப்படியிருந்தும் மனதில் அமைதியைக் காணேம். காரணம் என்ன? ஆம்; சந்த்ரு என் மாஜி நண்பன் ஆகிவிட்டான். அதுவே என் ஹிருதயத்தை அறுத்துக் கொண்டிருந்தது.

மார்ச்சு மீ 14-ம் தேதி-இதைக் காலண்டரிலிருந்து அப்படியே கத்தரித்துக் கண்ணுடியில் அடைத்து வைத்திருக்கிறேன். என் மனைவி என் செய்கையைக் கண்டு நையாண்டி பண்ணுகிறுள். என் புத்திர பாக்கியமோ, “அப்பா, அதென்ன வெறும் பக்கத்தைக் கண்ணுடி போட்டு வச்சிருக்கே! நல்ல படம், இதோ பாரு. அதை எடுத்துட்டு இதைப் போட்டா?” என்கிறது. பேதைகள்! அவர்களுக்கு என்ன தெரியும்? நான்கு வருடங்களாக யாரைப்பார்க்கவேண்டுமென்று ஆவலாய்ப் பறந்தேனே, அவனைப் பார்த்த புண்ணிய நாளல்லவா, அது?

அன்று காலையில் அவசர அவசரமாக ஆபீசுக்குச் சென்று கொண்டிருந்தேன். கொஞ்சம் பிந்திச் சென்றால் அந்தச் சிடுமூஞ்சி மானேஜருக்கு யார் பதில் சொல்ல முடியும்? என் நடையில் விறு விறுப்பு காணப்பட்டதே யொழிய ஹிருதயம் பழைய கட்டை வண்டி வேகத்தில்தான் ஓடிக் கொண்டிருந்தது. மழை சிறு சிறு தூறலாகத் தூறிக் கொண்டிருந்த சமயம். சிமெண்ட் ரோடு முழுவதும் கழுவி விடப் பட்டதுபோல் விளங்கியது. என் காலில் போட்டிருந்த பாதரக்ஷை ‘சரே’லென வழுக்கியது. நான் ரோட்டில் விழுந்தேன். மண்டையி லடிப்பட்டது தான் தெரியும். அதற்குள் மயக்கம் வந்துவிட்டது. தலை சுற்ற ஆரம்பித்து விட்டது.

நான் கண்ணை விழித்தபோது என் வீட்டிலிருந்தேன். ஹா! பக்கத்திலிருப்பது யார்? சந்த்ருவா? என் கண்களை நம்ப முடியவில்லை. ஆம்! அவனே! சந்தேகமில்லை. “சந்த்ரு, சந்த்ரு, எப்போடா வந்தாய்? எங்கிருந்து வந்தாய்?” எனப் பதட்டத்துடன் கேட்டேன். அவன் கண்களின் ஓரத்தில் நீர் தங்கிக் கொண்டிருந்ததைக் கவனித்தேன். “உன்னைப் பார்க்கக் கடவுள் என்னை இங்குக் கொண்டு வந்தார்.”—இதை அவன் மிகவும் சிரமத்துடன் சொன்னுன். ஏன்? அந்த வார்த்தைகள் அவன் ஹிருதயத்திலிருந்தல்லவா வந்தன?

எனக்கு இருந்த வலி போன இடந் தெரியவில்லை. மனைவி கொண்டுவந்து வைத்த காப்பி ஆறி ஆறு ஜாம மிருக்கும். அதுவரை நாங்களிருவரும் பேசிக் கொண்டிருந்தோம். நாலு வருட சம்பவங்களல்லவா? அவன் படித்தபின் வேலையில்லாத் திண்டாட்டத்தில் ரொம்ப கஷ்டப்பட்டானும். வேலைக்காக ரங்கூன் போக வந்த இடத்தில் என்னைச் சந்தித்து விட்டான். அவனைப் போக வேண்டாமென்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். கேட்டா

னில்லை. ஒற்றைக்காலில் நின்றான். அவன் மனதிலும் பெரிய போர் நிகழ்ந்துகொண்டிருந்தது. "பானு, உன்னைப் பார்த்துப் பேசவேண்டுமென்று உள்ளத்தில் உதித்த ஆவல் பூர்த்தியாகிவிட்டது. ரங்கூனில் வேலை கொடுப்பதாக மாமா சொல்லியிருக்கிறார். எங்கேயாவது வேலைதானே பார்க்க வேண்டும்? நான் நாளைக்குப் போகிறேன்" என்று அவன் சொன்னான்,

மறுநாள் அவன் ரங்கூனுக்குச் சென்றுவிட்டான். போகும்போது அடிக்கடி கடிதம் எழுதச் சொன்னான். இந்தத் தடவை சமாதானத்துடன் பிரிந்தோம். ரங்கூனுக்குப் போனவன் எப்பொழுது திரும்பி வருவான் என்று ஒவ்வொருகணமும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். பாழும் வேலையில்லாத் திண்டாட்டம்! நண்பர்களைப் பிரித்து விட்டது.

அவனைக் கண்டு சந்தித்தபின் எங்கள் அன்பு மலர் மலர்ந்தது—சூரியன் வரவால் மலரும் தாமரைபோல. அதினின்றும் தவழ்ந்து வருகின்றது நறு மணம். அன்பு; அதை நானறியேன். என்னைச் சந்தரு அன்பிற்கு அடிமை யாக்கி விட்டான். அவன் கடிதம் வந்துவிட்டால் போதும்! என் மனம் என்ன மகிழ்ச்சி அடைகிறது.

" அன்பின் வழியறியாத என்னை
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக்காட்டி
நான் அற்றேன் அலந்தேன்—என
என்புலம் மயங்கவே பித்தேற்றி
விட்டாய்"

என்பது எனது இதயக் குழறல் வார்த்தை சித்திரம் பெற்றுவிட்டதைக் காட்டுகிறது என்றே நினைக்கிறேன்.




# ஸ்ரீ ஸோமநாதர்

[கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்]

வெகு காலத்துக்கு முன் இந்தியாவில் எல்லாப் பாகங்களிலிருந்தும், காசியாத்திரை போவது போல, ஜனங்கள் கும்பல் கும்பலாக ஸ்ரீ ஸோமநாதரையும் தரிசிக்க வந்துகொண்டிருப்பார்கள். அவ்வளவு பெயர் போனவர் ஸ்ரீ ஸோமநாதர். அந்தக் கோயிலானது பணத்திலும், அழகிலும் மிகவும் உயர்ந்தது. அதனுடைய வெள்ளைச்சுவர்கள் பக்கத்துக் குன்றுகளிலுள்ள பெரிய மரங்களின் நிழலால் அலங்கரிக்கப்பட்டு, மிகவும் ரம்யமாக இருந்தன. அதனுடைய சலவைக்கற்களினலான, அகலமான படிகள், கீழேயுள்ள அரபிக்கடலின் நீலவர்ணத் தண்ணீர் மட்டம் வரையில் சென்றிருந்தன. கோயில் அர்ச்சகர்கள், யாத்திரீகர்களுக்கு, உயர்ந்தும் தாழ்ந்தும், நிலையில்லாமலும், ஓய்வில்லாமலும் அடிக்கும் அலைகளைக் காட்டி, "இதோ பாருங்கள், இந்த அலைகள் எப்படி எப்பொழுதும் இடைவிடாமல் ஸ்ரீ ஸோமசுந்தரரை வணங்கிக் கொண்டிருக்கின்றன! இப்படியல்லவோ நாமும் இருக்கவேண்டும்," என்று சொல்லுவதுண்டு.

ஆனல் இப்படி அர்ச்சகர்கள் சற்றும் கவலையில்லாமல், கடலைப் பற்றிக் கதைகள் கட்டுவதும் அவைகளை ஆச்சரியத்துடனும், ஸந்தோஷத்துடனும், இதர யாத்திரீகர்களுக்குச் சொல்லி, அவர்களையும் தங்களையும் மகிழ்வித்துக்கொள்வதுமான நாள்களெல்லாம் சொப்பனம்போலாகிவிட்டன. அர்ச்சகரெல்லாம் மனம் குன்றி, என்னசெய்வதென்று தெரியாமல் கலங்கும் மிகத் துக்ககரமான நாள் கடைசியாக வந்தது.

முகமது என்ற பெயரைக் கொண்ட ஒரு குரூர நெஞ்சம் படைத்த ஆப்கானிய அரசர் ஒரு பெரிய சேனையுடன் தெற்கு நோக்கி வருவதாயும், நிச்சயமாக ஸ்ரீ ஸோமநாதரின் கோயிலைக் கைப்பற்றப் போவதாகவும், அதோடல்லாமல், அந்தப் பிராந்தியத்திலுள்ள பணமெல்லாவற்றையும், கொள்ளையடித்துக் கொண்டு போகப் போவதாகவும் திடீரென்று வதந்தி பரவ ஆரம்பித்தது.

"எனக்கு ஒன்றும் பயமில்லை," என்றார், கோயிலில் வெகுகாலமாக இருந்துவரும் ஒரு கிழ அர்ச்சகர். "ஏனென்றால், பதினைந்து தடவையும் அதற்குமேலும் இந்த முகமது இந்தியாவின் மீது படையெடுத்து, கொள்ளையடித்துக் கொண்டுபோயிருக்கிறான்; ஆனல் ஒரு தடவையாவது இதுவரையில் இங்கு வந்தது கிடையாது. ஸிந்துபாலைவனத்தின்

வழியாகச் சேனையை அழைத்து வருவது மிகவும் சிரமம்."

இந்த சமயம் அவ்விடம் ஒரு தூதன் வந்து சேர்ந்தான். "நமது மஹாராஜா சேனை திரட்டும் வேலையில் தீவிரமாக இறங்கியிருக்கிறார். தேச பாதுகாப்புக்காக என்னென்ன செய்யவேண்டுமோ, அவ்வளவும் செய்துகொண்டு தானிருக்கிறார். அனேகமாகச் சேனையெல்லாம் திரட்டியாகிவிட்டது. சுற்று வட்டத்திலுள்ள சிற்றரசர்களெல்லாரும் உதவிக்காக இன்னும் அதிக சேனைகளுடன் தயாராயிருக்கிறார்கள். ஆனாலும், முகமது ஸ்ரீ ஸோமநாதர் கோவிலில் ஏராளமாக தனம் இருப்பதாகக் கேள்விப்பட்டு, எப்பாடுபட்டும் கோயிலைக் கைப்பற்றுவது என்ற பிரதிக்ஞையுடன் இருப்பதாகத் தெரிகிறது," என்று சற்று மெதுவான குரலில் சொல்லி முடித்தான்.

"அது எப்படியிருந்தாலும் சரி, அவன் ஒரு பொழுதும் ஸ்ரீ ஸோமநாதரைக் கொள்ளையடிக்க முடியாது. கோவிலின் சுவர்கள் மிகப்பலமானவை; ஸோமநாதரோ, மிக உக்கிரமானவர். ஆமாம்...., முகமதுவின் சேனைகள் எப்படி ஸிந்துபாலைவனத்தைக் கடக்கும்? நான் கேட்கிறேன்," என்றார் அதே கிழ அர்ச்சகர்.

"யாருக்குத் தெரியும்? அநேகம் பேர்கள் நடுவழியில் கடுந்தாகத்தினால் இறக்கிறார்களாம்; இன்னும் சிலர் அந்தத் தாங்க முடியாத உஷ்ணத்தினால், பயித்தியமாகி விடுகிறார்களாம். இருந்தாலும், முகமது ஒரு தடவை ஒரு காரியத்தைச் செய்வதாக நிச்சயித்துவிட்டால், அப்புறம் அதை மாற்றுவதே கிடையாதாம். அதோடல்லாமல் இவைகளுக்கெல்லாம் சளைக்காமல் இருப்பதற்காகப் போதுமான அளவு சேனைகள் இந்தத் தடவை அவர்கையில் இருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்" என்றான் அத் தூதன்.

"நம் ஸோமநாதர், ஒரு பொழுதும் தம் கோயிலை அப்படி அழிந்து போகும்படி விட்டுவிடமாட்டார். இது நிச்சயம்," என்று அந்தக் கிழவர் சொல்லி எதிரேயுள்ள நீலக் கடலின் மீது பார்வையைச் செலுத்தினார்.

ஆனால், மற்றுமுள்ள எல்லா அர்ச்சகர்களும் பின்னே வரப்போகும் முற்றுகைக்காக, முன்னதாகவே பாதுகாப்புக்கு வேண்டியவைகளை அதிசீக்கிரமாகச் செய்ய ஆரம்பித்தார்கள். இருந்தும், கால தாமதம் ஆகிவிட்டபடியால் முகமது, ஏற்கனவே வந்ததைப் போல, இந்தியாவின் வேறுபாகங்கள் வழியாய்க் கடந்து, வரும் வழியில் ஏராளமாகக் கொள்ளையடித்துக் கொண்டு, நகரத்தை நெருங்கினான். பக்கத்துக் குன்றுகளில் வசித்து வந்த, அர்ச்சகர்களின், ஆட்கள் வேகமாக ஓடி வந்து, ஸோமநாதரின் நகரத்தை எதிரிகள் பிடித்துக் கொண்டு விட்டதாகவும், சேனைகள் கோயிலை நோக்கி வருவதாகவும், கொஞ்ச நேரம்கூட இனித்தாமதிக்கக்கூடாதென்றும், சண்டையை உடனே ஆரம்பிக்க வேண்டுமென்றும் மிகப் பரபரப்புடன் கூறி முடித்தார்கள்.

இருளடைவதற்கு முன், எதிரிகளின் சேனைகள் கோவிலின் எல்லாப் பாகங்களிலும் வளைத்துக் கொண்டன. ஸந்நிதிக்குப் போகும் படிக்கட்டுகள் தான் நீக்கப்பட்டன. அர்ச்சகர்கள், அங்கிருந்தபடியே, எல்லோரும் கேட்கும்படி உரக்கக்

கூவினர்கள்: "நம், மஹாமஹிமை பொருந்திய ஸோமநாதர் கோயிலைக் கைப்பற்றும் கெட்ட எண்ணத்துடன் வரும் எதிரிகளெல்லாம் முறியடிக்கப்படுவது நிச்சயம். சந்தேகமேயில்லை. தைரியமாகச் சண்டையிடுங்கள்."

நீடித்த இரண்டு நாட்கள் அர்ச்சகர்களெல்லாம் தைரியமாகச் சண்டை செய்தார்கள். சுற்றுவட்டத்திலுள்ள சிற்றரசர்களும் தங்கள் சேனைகளைக் கோயிலைக் காப்பாற்றுவதற்காக அனுப்பினர்கள். முகமதுவின் சேனைகள் நடுவில் அகப்பட்டுக் கொண்டன.

மூன்றும் நாள், நாம் எப்படியும் தோற்கடிக்கப்படுவோம் என்றுணர்ந்த முகமது, உடனே குதிரையிலிருந்து வேகமாய்ப் பாய்ந்து, அல்லாவைக் கூப்பிட்டுக்கொண்டு தரையில் சாய்ந்தார். தமது அரசர் தரையில் மண்டிபோட்டு அல்லாவைத் தொழுவதைக் கவனித்த, இதரச் சிப்பாய்கள், எதிரேயுள்ள அவரது விரோதிகளின்மேல் பாய்ந்து, அவர்களை வீழ்த்திக்கொண்டு கோயிலின் எதிரே தோன்றினர்கள்.

"குடாஹீ, குடாஹீ" என்று அவர்கள் கத்தினர்கள். (அதாவது கடவுள் இருக்கிறது என்பது அர்த்தம்).

"ஸோமநாத், ஸோமநாத்" என்று நடு நடுங்கிக்கொண்டு கத்தினர் அர்ச்சகக் கிழவர். அவர் அந்த இருட்டான கர்பக்கிரஹத்தில் விக்ரஹத்துக்கு முன்னல் நின்ருர். அவரைச் சுற்றி மற்ற அர்ச்சகர்களும் நின்ருர்கள். முகமது உள்ளே நுழைந்தார். கடைசியாகக் கிழவர் முகமதுவின் முன் தோன்றி ஏராளமாகப் பணத்தைக் காட்டி, "இவ்வளவையும் நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். எங்கள் ஸோமநாதரை மாத்திரம் விட்டு விடுங்கள்," என்று கெஞ்சினர்.

முகமதுவோ, ஆத்திரத்துடன், "நான் விக்ரகம் விற்பவன் அல்லன், விக்ரகமுடைப்போன்" எனக் கூறினர். கண்மூடித் திறப்பதற்குள், விக்ரகம் இரண்டு துண்டாயிற்று.

கொஞ்ச நேரம் வரையில் ரத்தம் தரையில் ஆருகப் பெருகுவது போலத் தோன்றிற்று. ஆனல் அது அப்படியல்ல; ஏனென்ருல் ஸ்ரீ ஸோமநாதர் விக்ரஹமானது, வர்ணம் பூசின மரத்தினல் ஆகியது. அப்படிச் சிதறிய சிவப்பு ரத்தம், உண்மையான ரத்தத் துளிகளல்ல. அவைகளெல்லாம் விலை மதிக்கக் கூடாத சிவப்புக் கற்களும், ரத்தினங்களுமே. அவ்வளவும் அந்த ஸ்ரீ ஸோமநாதர் விக்ரகத்தினுள்ளே இருந்தவைகளே தவிர வேறல்ல.

அதனல்தான், இந்துதேச சரித்திரத்தில், "முகமது என்ற ஆப்கானியர், ஸோமநாதர் கோயிலில் கொள்ளையடித்த தனம், வேறு எந்த அரசருடைய பொக்கிஷத்திலும் ஒரு பொழுதும் இருந்ததில்லை," என்று அழியா எழுத்தில் எழுதப்பட்டிருக்கிறது.





# மாணவனின் தினக் கடமைகள்

[வி. ராஜாராவ், எழும்பூர்]

(“கத்தியின்றி, இரத்தமின்றி” என்ற மெட்டு)

1. தோழர்காள் நாம் ஒன்ருய்ச் சேர்ந்து
   சிறப்புமிளிர நடப்போமே
   சீலமுடனே மாலே வேளே
   களிப்புடன் விளேயாடவே.

2. அனுதினம் அதிகாலேயினில்
   படுக்கை விட்டு எழுந்தபின்
   கணப்பொழுதும் சோம்பலின்றிப்
   பற்கள் முகம் துலக்குவோம்.

3. பிறகு நாங்கள் நெற்றியினில்
   நீறு நன்ருய்ப் பூசியே
   சுறுசுறுப்பாய்ப் பாடங்களேக்
   கருத்துடனே ஓதுவோம்.

4. சுத்த நீரில் அனுதினமும்
   தேகம் தேய்த்துக் குளித்திட்டுச்
   சுத்த ஆடைதன்னே நாங்கள்
   சொகுசுடனே அணிகுவோம்.

5. அன்னேயிட்ட அமுதை நாங்கள்
   அன்புகொண்டு அருந்துவோம்
   பின்னர் நாங்கள் பள்ளி சென்று
   பாடங்களே ஓதுவோம்.

6. வேதவாக்கும் தெய்வ வாக்கும்
   குருவின் வாக்கே ஆதலால்,
   பேதமின்றிக் குருவின் பேச்சைக்
   கருத்துகொண்டு கவனிப்போம்.

7. மாலே நேரம் மைதானத்தில்
   கவலேயின்றிக் களிப்புடன்
   பாலர் யாங்கள் பலரும் மெச்சக்
   கூடி ஓடி ஆடுவோம்.

8. பின்னர் நாங்கள் கைகால் கழுவிக்
   கோயிலுக்குச் செல்லுவோம்
   அன்புடனே ஆண்டவனேப்
   பணிவுடனே தொழுதபின்,

9. எங்கள் வீடு சென்று நாங்கள்
   பள்ளிப்பாட மனேத்தையும்
   கொஞ்சமேனும் சோர்வு இன்றிக்
   கவனத்துடனே படிப்போமே.

10. இரவி லன்னே யிட்டசோற்றைப்
    பரிவுடன் புசித்தபின்
    சிறிது நேரம் சந்தோஷமாய்
    இங்குமங்கும் உலாவுவோம்.

11. ஒன்பதானவுடனே நாங்கள்
    எங்களின் படுக்கைக்கு
    இன்பமாய் உறங்கச் செல்வோம்
    ஈசனேத் துதித்திட்டே.

